## *[1]*

*இளம் வயதில் நான் கேட்டுப்பிரமித்த மேடைப்பேச்சாளர் என்றால் கேரள சிந்தனையாளரும் மார்க்ஸியருமான பேராசிரியர் எம்.என். விஜயன்தான். கண்ணனூரில் அவரை நான் ஒருமுறை நேரிலும் சந்தித்திருக்கிறேன். விஜயன் ஒருமுறை சொன்னார் 'மிக அதிகமான புல் தின்று மிகக் கொஞ்சமாக பால் கொடுக்கும் ஒரு பசுதான் அழகியல் என்பது'*

*மாடு வளர்த்தவர்களுக்கு இந்த வரி இன்னும் புரியும். மாடு பகலெல்லாம் மேய்ந்துகொண்டே இருக்கிறது. மாலையில் கைகளைக்க புல் பறித்து, கமுத்தொடிய புல் கொண்டுவந்து போட்டால் அதை அரைமணிநேரத்தில் தின்று முடித்துவிடுகிறது. இரவெல்லாம் வைக்கோல் மெல்வதும் உண்டு. தின்னாமலிருக்கும் கொஞ்சநேரத்தில் தின்றதை அசைபோட்டுக்கொண்டிருக்கும். இவ்வளவும் காலையிலும் மாலையிலுமாகக் கறக்கும் இரண்டுலிட்டர் பாலுக்காக. சின்ன வயதில் நானே பிரமித்திருக்கிறேன் அவ்வளவு பாலுக்காகவா இவ்வளவு புல்?*

*புல் செரித்து உடலாகி ரத்தமாகி பசுவின் ஆன்மாவாக ஆகி அதன் மடியில் கசிந்திறங்க வேண்டியிருக்கிறது. அழகியல் என்பது அதைப்போன்றதுதான். உலகவாழ்க்கை அனைத்தையும் அது அறிந்து உள்வாங்கிக்கொள்ளவேண்டும். பல்லாயிரம் உலகியல்செய்திகள், பலவகைப்பட்ட உணர்ச்சிநிலைகள், முரண்படும் கருத்துக்கள் அனைத்தையும் உண்டு செரித்து உடலாக்கி உதிரமாக்கி கொள்ளவேண்டும். அதன்பின்னரே பால் ஊறும். ஒவ்வொரு எளிய அழகியல் கொள்கைக்கு அடியிலும் மிகப்பிரம்மாண்டமான வாழ்க்கை அவதானிப்பு இருக்கிறது.*

*நான் பின்னர் ஒருமுறை யோசித்தேன். அப்படியென்றால் ஆன்மீகம்? நானறிந்த ஆன்மஞானிகள் பலர் மிகக்குறைவாகவே வாசித்தவர்கள். மிகமிகக் குறைவாகவே*

*வாழ்க்கையை அறிந்தவர்கள். ஆன்மீகம் பசு அல்ல என்று நினைத்துக்கொண்டேன். அது பட்டாம்பூச்சி. மிகக்குறைவாக உண்டு மிக அதிகமாகப் பறக்கும் உயிர் அது.*

*ஏனென்றால் பசு செடியையே உண்கிறது. பட்டாம்பூச்சி அச்செடியில் பூத்த மலரில் ஊறிய தேனை மட்டுமே உண்கிறது. வாழ்க்கையின் சாராம்சத்தை மட்டுமே அறிந்து வண்ணச்சிறகுகளாக அதை மாற்றிக்கொள்பவரே ஆன்மீகவாதியாக ஆகிறார்.*

*இலக்கியத்திற்குத் தகவல்கள் கருத்துக்கள் உணர்ச்சிகள் என எல்லாமே தேவையாகின்றன. செடியின் வேரும் தண்டும் இலைகளும் என அவற்றைச் சொல்லலாம். அச்செடியில் முளைத்த மலர் என்பது அதன் கனவு. அக்கனவின் தேன் மட்டுமே போதும் ஆன்மீகத்துக்கு. அதை நாம் படிமம் என்று சொல்லலாம்.*

*ஆன்மீகம் வெறுமே படிமங்கள் வழியாகவே செயல்படுகிறது. அதற்கு ஒட்டுமொத்தப் பண்பாடோ, வரலாறோ, வாழ்க்கையோ தேவையில்லை. அவற்றிலிருந்து திரண்டுவந்த ஒரு படிமம் போதும். பௌத்தப்பண்பாடும் வரலாறும் சடங்குகளும் ஒரு பௌத்தமெய்ஞானிக்குத்தேவையில்லை. ஒரு வெண்தாமரையே போதும்.*

*ஆன்மீகத்தின் மொழி படிமங்களே. மொழியில் விளக்கப்படும் படிமங்கள் அல்ல அவை. மனதிலிருந்து மனதுக்கு, கனவிலிருந்து கனவுக்கு நேரடியாகக் கைமாறப்படும் அகத்தின் துளிகள் அவை. அவற்றுக்கு அர்த்தமளிப்பது ஆன்மீகவாதியின் கனவும் தியானமும் மட்டுமே. கல்வி அல்ல.*

*அந்தப்புரிதலை மறுக்கும் ஒரு வரியைக் கேரளச் சிந்தனையாளரும் வரலாற்றாசிரியருமான பி.கே.பாலகிருஷ்ணன் எழுதிய 'நாராயணகுரு- தொகைநூல்' என்ற முக்கியமான நூலில் வாசித்தேன். 'வரலாற்றுரீதியான ஆன்மீகம்' என்ற சொல்லை அதில் பாலகிருஷ்ணன் பயன்படுத்தியிருந்தார். நான் ஆச்சரியத்துடன் அவரிடம் கேட்டேன். அதென்ன வரலாற்று ரீதியான ஆன்மீகம், வரலாற்று ரீதியான பொருள்முதல்வாதம் போல? Historical Materialism போல Historical Spritualism என ஒன்றை முன்வைக்கிறீர்களா என்ன?*

*உரக்கச்சிரித்துக்கொண்டு பாலகிருஷ்ணன் சொன்னார், 'ஆமாம்...ஆன்மீகப்பாட்டாளிகளே , உங்களுக்கு இழப்பதற்கு ஒன்றுமில்லை,*

கடவுள்களைத்தவிர' நானும் சிரித்தேன். அதன்பின் சட்டென்று தீவிரமாகி பாலகிருஷ்ணன் ஆன்மீகத்தின் வரலாற்றுப்புலம் பற்றி பேச ஆரம்பித்தார்.

ஆன்மீகம் என்பது மதம்சார்ந்ததல்ல. நெடுங்காலமாக மதங்கள் ஆன்மீகத்தைக் கையாண்டு வருகின்றன என்று சொல்லலாம். ஆன்மீகம் என்ற சொல்லை 'முழுமைநோக்கு', 'சாராம்ச நோக்கு' என்ற இரு அடிப்படைக்கூறுகள் கொண்டது எனலாம். வாழ்க்கையைப்பற்றிய ஒட்டுமொத்த நோக்கு ஆன்மீகத்தின் அடிப்படை. சமூகத்தை,மனிதகுலத்தை, உயிர்க்குலத்தை, பிரபஞ்சத்தை முழுக்கக் கருத்தில்கொண்டு சிந்திப்பது அது.

அச்சிந்தனையின் விளைவாக அடைந்த சாராம்சமான தெளிவையே ஆன்மீக தரிசனம் என்கிறோம். அதனடிப்படையில் வாழ்க்கையின் எல்லாக் கூறுகளையும் புரிந்துகொள்ள விளக்க ஆன்மீகம் முற்படுகிறது. ஆன்மீகத்தின் உலகியல் லாபம் என்பது அறம் என்கிறார் அம்பேத்கர், அவரது புத்தரும் அவரது தம்மமும் என்ற மகத்தான நூலில்.

ஆன்மீகத்தைப்பற்றிப் பேசுபவர்கள் இரண்டு முன்முடிவுகளின் அடிப்படையில் பேசுவதை பாலகிருஷ்ணன் சுட்டிக்காட்டினார். ஒன்று, ஆன்மீகம் என்பது முழுக்கமுழுக்கத் தனிநபரின் அகம் சார்ந்தது. இரண்டு, ஆன்மீகம் என்பது உலகியல் விஷயங்களுடன் தொடர்பற்றது, அல்லது அதற்கு எதிரானது. உலகியல் சார்ந்த சிந்தனைகள் மற்றும் உணர்ச்சிகளுக்கு அப்பால் ஆன்மீகம் அதன் தூய படிமங்கள் வழியாக நிகழ்ந்துகொண்டிருக்கிறது என்பார்கள் அவர்கள்.

அவ்விரு முன்முடிவுகளும் முற்றிலும் பிழையானவை என மறுத்த பாலகிருஷ்ணன் அவ்வகையான பிழைநம்பிக்கை கொண்டவர்கள் ஆன்மீகத்திற்கான தேடலில் ஆன்மீகம் மாதிரியான இன்னொன்றைக் கைதவறுதலாக எடுத்துவிடுகிறார்கள் என்றார். அதற்காகவே ஆன்மீகம் பற்றிய வரலாற்றுணர்வை முன்வைப்பதாகச் சொன்னார்.

முதல் விஷயம் ஆன்மீகம் ஒருபோதும் ஒரு தனிநபருக்குள் நிகழ்வது அல்ல. அது மனிதகுலம் தோன்றியநாள் முதலே உருவாகி வந்த அடிப்படை வினாக்களால் ஆனது.அவ்வினாக்களுக்கு மனிதகுலம் இதுகாறும் அடைந்த விடைகள் பண்பாட்டில் நிறைந்திருக்கின்றன. அவை தரிசனங்களாகவும் படிமங்களாகவும் ஒவ்வொரு தனிமனிதனைச்சுற்றியும் பரவியிருக்கின்றன. அந்தப் பெரும்பரப்பின் ஒரு துளியாக நின்றுகொண்டுதான் ஒவ்வொருவரும் தங்கள் ஆன்மீகத்தை அடைகிறார்கள்.

அந்தப் பெரும்பரப்பைக் கடல் என்று சொல்லலாம். தனிமனித அகம் என்பது அந்தக்கடலில் உள்ள மீன். அக்கடலிலேயே பிறந்து அக்கடலையே உண்டு அதிலேயே நீந்திவாழ்கிறது அது. அந்த மீனுக்குள்ளும் கடல்தான் இருக்கிறது.

இரண்டாவதாக, ஆன்மீகம் என்பது எப்போதும் மனிதவாழ்க்கையின் வினாக்களில் இருந்துதான் ஆரம்பிக்கிறது. ஒருபோதும் அது வாழ்க்கைக்கு அப்பால் தன் வினாக்களை எழுப்பிக்கொள்வதில்லை. பண்பாட்டிலும் வரலாற்றிலும் உள்ள வினாக்களுக்காக அது தேடுகிறது. சாராம்சப்படுத்தியும் நுண்மைப்படுத்தியும் பார்க்கும் போக்கில் அது கொஞ்சம் கொஞ்சமாக அன்றாட யதார்த்தங்களில் இருந்து விலகிச்செல்கிறது. எப்போதைக்குமான விடைகளைப்பற்றி மட்டும் பேசுகிறது. ஆனால் அதன் விடைகள் மீண்டும் அன்றாட வாழ்க்கையை நோக்கியே வருகின்றன. எந்த ஆன்மீக தரிசனமும் அறத்தரிசனமாக உருமாறி மக்களின் வாழ்க்கைக்கு வரத்தான் வேண்டும்.

பறவை மண்ணில் இருந்துதான் மேலே செல்கிறது. விண்ணின் ஒளியில் அது சுற்றிவரலாம். ஆனால் அதன் உணவு மண்ணில்தான். அதன் கூடும் குஞ்சும் மண்ணில்தான். ஆகவே அது மண்ணைத்தான் மேலிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறது.

ஆகவே ஆன்மீகத்தை மண்ணில் இருந்து பிரித்து நோக்கவேண்டியதில்லை. அதை எப்போதும் பண்பாட்டின், வரலாற்றின் ஒரு நுண்ணிய நிலையாக மட்டுமே எண்ணி ஆராயவேண்டும் என்று வாதிட்டார் பாலகிருஷ்ணன்.

ஆன்மீகம் படிமங்களால் நிகழ்வது. ஆன்மசாதகனின் ஆழ்மனதில் விளைவது அது. அவனுடைய கனவாலும் தியானத்தாலும் அறியப்படவேண்டியது. ஆனால் அது ஓர் உச்சநிலையில்தான். அதற்கு முன் அவன் தன் அகத்தைப் படிமங்களால் நிறைத்துக்கொள்கிறான். அந்தப்படிமங்களை அவன் எப்படி அடைகிறான் என்பது மிகமிக முக்கியமானது

அந்தப்படிமங்களை அவன் தேர்வுசெய்கிறானா இல்லை தன்னிச்சையாக அவனுக்குள் அவை வந்து சேர்கின்றனவா என்பது முக்கியமான கேள்வி. பெரும்பாலான மனிதர்களின் அகப்படிமங்கள் அவர்களின் பிறப்புச்சூழலால், வளர்ப்பால் தன்னிச்சையாக வருபவைதான். ஒருவன் இந்துவாக கிறித்தவனாக இஸ்லாமியனாக இருப்பது பெரும்பாலும் அவனுடைய தேர்வல்ல.

ஆனால் ஓர் உண்மையான ஆன்மீகசாதகன் தன்னுடைய அகத்துக்குள் வந்து நிறையும் படிமங்களை தானே தேர்வுசெய்வான். ஓர் அறிவியலாளன் தன் சோதனைச்சாலையின் பொருட்களை எந்த அளவுக்கு கவனமாக தேர்வுசெய்வானோ , எந்த அளவுக்கு நுட்பமாக அவற்றை அறிந்திருப்பானோ அந்த கூர்மையை நாம் ஆன்மீகசாதகனிடமும் எதிர்பார்க்கவேண்டும்.

அவ்வாறு ஒருவன் தனக்குள் இருக்கும் ஆழ்படிமஅச்சுக்களையும் தன்னுள் வந்து நிறையும் படிமங்களையும் சரியாக மதிப்பிட்டு அறியவேண்டுமென்றால் அவனுக்கு அவற்றைப்பற்றிய வரலாற்றுப்புரிதல் தேவை. அந்தத் தெளிவு உடைய ஆன்மீகத்தையே வரலாற்றுரீதியான ஆன்மீகம் என்கிறேன் என்றார் பாலகிருஷ்ணன்.

ஆமாம். பட்டாம்பூச்சி தேனை அருந்துகிறது. ஆனால் தேனை அது தேடித்தேடி சேகரிக்கிறது. தேன் என அது சர்க்கரைக்கரைசலைக் குடிப்பதில்லை. தேனை மட்டும் தேடும் அந்தப் பிரக்ஞையை வரலாற்றுணர்வு என்று சொல்லலாம்

அப்படிப்பார்த்தால் நாம் நம்முடைய ஆன்மீகத்தை சரியான வரலாற்றுணர்வுடன் புரிந்துகொண்டிருக்கிறோமா என்ன? நம்முடைய பொருளியலைப்பற்றி நாம் கவலை கொள்கிறோம். அரசியலைப்பற்றி கவனமாக இருக்கிறோம். ஆன்மீகத்தைப்பற்றிப் பொருட்படுத்துவதில்லை

ஆன்மீகம் தேவையில்லை என்று நினைக்கிறோம். அப்படி ஒன்று நம்மில் இல்லை என்று எண்ணுகிறோம். ஆனால் வாழ்க்கையைப்பற்றி ஒட்டுமொத்தமாக அணுகி சாராம்சப்படுத்திக்கொண்ட ஒரு நோக்கு இல்லாத மனிதனே இல்லை. அதுவே அவனுடைய ஆன்மீகம். அந்த ஆன்மீகத்தில் இருந்தே நம்முடைய கனவுகளும், இலட்சியங்களும், அறமும் உருவாகின்றன.

அந்த ஆன்மீகம் நம்மில் எப்படி நுழைகிறது எப்படி வளர்கிறது என நாம் அறிந்திருக்கவேண்டும். அதைப்பற்றிய விவாதங்கள் நம் அறிவுச்சூழலில் மிக அரிதாகவே நிகழ்ந்துள்ளன.

*

ஒருமுறை குமரிமாவட்டத்தில் உள்ள ஒரு தொன்மையான நூலகத்துக்குச் சென்றிருந்தேன். நூறாண்டுக்கால வரலாறுள்ள அந்நூலகம் இன்று அழிந்துவிட்டது. ஓட்டுக்கூரை உடைந்து மழைநீர் உள்ளே பெய்ததனால் அதன் நூலக அடுக்குகளில் புராதனமான நூல்கள் பெரும்பாலும் மட்கிப் பூஞ்சைபிடித்து ஊதிப்போயிருந்தன. அந்நூல்களை எடுத்தெடுத்துப்பார்த்தபோது திடீரென்று ஒரு மறைந்த நகரத்தை , ஒரு பண்பாட்டை மண்ணுக்குள் தோண்டி எடுத்த உணர்ச்சியை அடைந்தேன்.

அங்கிருந்த நூல்களில் பெரும்பாலானவை பதினெட்டாம் நூற்றாண்டிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் வெளியான மத விளக்க நூல்கள். தலையணை தலையணையாகக் கெட்டிஅட்டைபோட்ட நூல்கள் அவை. பெரும்பாலானவை சைவம் சார்ந்தவை. சைவசித்தாந்த விளக்கங்கள். சைவநூல்களுக்கு உரைகள். வைணவ நூல்களும் ஏராளமாக இருந்தன. கிறித்தவநூல்களும் பல இருந்தன. அந்நூல்களைப் புரட்டிப் பார்க்கையில் தமிழில் மதமறுமலர்ச்சியின் ஒரு நூற்றாண்டு கடந்து சென்றுவிட்டிருப்பதை உணர முடிந்தது.

திருநெல்வேலியில் எந்த சைவரைக் கேட்டாலும் அவரது தாத்தா ஒரு சில சைவநூல்களை எழுதியிருப்பதாக சொல்வார் என்று ஒரு கிண்டல் உண்டு. அது பொய்யல்ல. உண்மையிலேயே அவ்வளவு சைவநூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. ஊருக்கு ஒரு சைவப்பிரகாச சபைகள் உருவாயின. அங்கே சொற்பொழிவுகளும் வகுப்புகளும் நடந்தன. அரைநூற்றாண்டுக்கு முன்புதான் அந்த அலைமெல்ல ஓய்ந்தது. இன்று கட்டிடங்கள் எஞ்சுகின்றன. நூலக அடுக்குகளில் நூல்களும்.

புராதனநகரின் இடிபாடுகள் போல நூற்றுக்கணக்கான நூல்கள்! அந்நூல்களில் பெரும்பாலானவை இனிமேல் அச்சாகப்போவதில்லை. அச்சானாலும் எவரும் வாசிக்கமுடியாது. அவற்றில் சிவஞானபோத விளக்கம் என்ற நூலை மட்டும் நான் ஒரு மாதிரிக்காக எடுத்துவைத்துக்கொண்டேன். நான் இன்று வரை வாசித்ததிலேயே மிகமிகக் கடுமையான தமிழ் அது. ஒரு தட்டில் கல்லாலான சோறும் இரும்பாலான பொரியலும் பரிமாறி வைத்தது போல இருக்கிறது அந்நூல்.

இந்தக் காலகட்டம் தமிழில் முக்கியமானது. இக்காலகட்டத்தில்தான் தமிழின் ஆன்மீகம் மறுவரையறை செய்யப்பட்டது. அல்லது மறுதொகுப்பு செய்யப்பட்டது. ரத்தினச்சுருக்கமாக என்னென்ன நிகழ்ந்தது என்று சொல்கிறேன். முதலில் சைவம் மறுதொகுப்படைந்தது. சைவ வழிபாட்டுமுறைகள் தொகுக்கப்பட்டன. [அதில் நடந்த

உள்விவாதங்களுக்கு சாட்சியாக இன்று கிடைப்பது ஆறுமுகநாவலருக்கும் சிதம்பரம் தீட்சிதர்களுக்கும் நடந்த பூசல்களைப்பற்றிய தகவல்கள்] சைவசித்தாந்தம் நவீன தத்துவ தர்க்க அடிபப்டையில் மீள்விளக்கம் அளிக்கப்பட்டு சைவமதத்தின் தத்துவமையச்சரடாக முன்வைக்கப்பட்டது. சைவமதத்தையும் சைவ சித்தாந்தத்தையும் ஒன்றாக இணைப்பதற்காகத்தான் அவ்வளவு நூல்கள் எழுதப்பட்டன என்று நினைக்கிறேன்

அதேபோல வைணவத்தின் வழிபாட்டுமுறைகள் அனைத்தும் தொகுக்கப்பட்டு ஒரு பொதுப்போக்காகத் திரட்டப்பட்டது. [அதில் நடந்த உள்விவாதங்களுக்கு சாட்சியாக தென்கலை வடகலை வைணவக்குழுக்கள் நடுவே நிகழ்ந்தமோதல்களைப்பற்றிய நீதிமன்ற வழக்குகள் பல உள்ளன] ஆனால் சைவம்போல வைணவத்தின் தத்துவத்தரப்புகள் ஒருங்கிணைவை அடையவில்லை. ராமானுஜரின் விசிஷ்டாத்வைதத் தரப்புகளும் மாத்வரின் துவைதம் சார்ந்த தரப்புகளும் வல்லபரின் சுத்தாத்வைதத் தரப்புகளும் ஒருவரோடொருவர் கடும் விவாதத்தில் ஈடுபட்டுக்கொண்டிருந்தார்கள்.

தமிழகத்தில் எப்போதுமே வேதாந்தமோ அதன் அடுத்தகட்ட வடிவமான சங்கர அத்வைதமோ வலுவாக இருந்தது இல்லை. சங்கரமடங்கள் அத்வைதத்துக்குப் பதில் புரோகிதமதத்தையே முன்னிறுத்தின. விவேகானந்தரின் நவீன அத்வைதத்தை ஒட்டி உருவான மறுமலர்ச்சி பெரிய அளவில் மக்களியக்கமாக ஆகவில்லை. அறிவார்ந்த ஒரு விவாதமாக நிகழ்ந்து சில ராமகிருஷ்ணமடம், ராமகிருஷ்ணதபோவனம் போன்ற சில அமைப்புகளை மட்டும் அது உருவாக்கியது. பாரதி போன்ற சில முன்னோடிகளில் ஒரு தரிசனமாக மட்டும் அது செல்வாக்கு செலுத்தியது.

தமிழகத்தில் சாக்தம் ஒரு பெரிய ஆன்மீக அமைப்பாக நெடுங்காலம் இருந்திருக்கிறது. சாக்த வழிபாட்டுமுறைகளும் சாக்த ஆலயங்களும் தமிழகமெங்கும் உள்ளன. இன்றும் தமிழக ஆன்மீகத்தில் சாக்தம் முக்கியமான இடம் வகிக்கிறது. ஆனால் பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆன்மீக மறுவரையறையில் சாக்தம் இடம்பெறவே இல்லை. சாக்தம் பற்றிய விவாதங்கள் நிகழவுமில்லை.

தமிழ்ச்சூழலில் இஸ்லாம் ஒருவணிக மதமாக முதலில் அறிமுகமாயிற்று. அதன்பின்னர் அது வடக்கத்தியப் படையெடுப்பாளர்களுடன் மீண்டும் வந்து சேர்ந்தது. தமிழக இஸ்லாமில் இந்த இரு மாறுபட்டபோக்குகள் எப்போதுமே உள்ளன

தமிழகத்தில் இஸ்லாமிய ஆன்மீகத்தைப் பதினாறாம் நூற்றாண்டில் சதக்கத்துல்லா அப்பா அவர்க்ள் மறுவரையறை செய்தார். அவர் முன்வைத்ததைத் தமிழ்இஸ்லாம் என்றே சொல்லமுடியும். தமிழகத்தின் பொதுப்பண்பாட்டின் இருந்த பிற ஆன்மீக அம்சங்களுடன் ஆக்கபூர்வமான உரையாடலை மேற்கொண்டு அது உருவானது. உமறுப்புலவர் முதல் குணங்குடிமஸ்தான் வரையிலான இஸ்லாமிய ஞானிகள் அந்த தமிழ் இஸ்லாமின் உருவாக்கங்கள். ஆனால் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் தமிழ்இஸ்லாம் பெரும்பாலும் தமிழ் இஸ்லாமிய வணிகர்களுக்குள்ளேயே இருந்தது.

பதினெட்டாம் நூற்றாண்டில் இஸ்லாம் அந்தத் தமிழ் அடையாளத்தைத் துறக்கவும் உலகளாவிய இஸ்லாமியப் பண்பாட்டின் பகுதியாகத் தன்னை அடையாளம் காணவும் முற்பட்டது. இந்த மறுவரையறைப்படுத்தும்போக்கு இன்றுவரை தொடர்ந்து நீடிக்கிறது. இன்று உமறுப்புலவர், குணங்குடியார் போன்றவர்களுக்கு இஸ்லாமில் இடமில்லை என்னும் நிலை வந்துள்ளது.

பதினேழாம் நூற்றாண்டில் இங்கே வந்துசேர்ந்த கிறித்தவம் இங்குள்ள மேல்தட்டு மக்களுடனும் மதத்துடனும் உரையாட முயன்றது. தேம்பாவணி அதற்கான மிகச்சிறந்த ஆதாரம். இரேனியஸ் ஐயரின் பைபிள் மொழியாக்கம் அந்த மேல்தட்டுமக்களை இலக்காகக் கொண்டது. ஆனால் பதினெட்டாம் நூற்றாண்டில் கிறித்தவம் தன்னை அடித்தள மக்களின் மதமாக மறுவரையறை செய்துகொண்டது. பைபிள் ‘சந்தைப் பிரசங்கத்துக்கான’ மொழிநடையில் மொழியாக்கம் செய்யப்பட்டது. கிறித்தவம் அதன் செவ்வியல் அம்சங்களைத் துறந்து ஒரு நாட்டார்மதமாகத் தன்னை இங்கே முன்வைக்க ஆரம்பித்தது.

இவைதவிர முக்கியமான இரு புதிய விஷயங்கள் உருவாகிவந்தன. ஒன்று சித்தர்மரபு என்ற ஒன்றின் உருவாக்கம். தமிழ்ச்சித்தர்கள் என்ற ஒரு பரம்பரை இக்காலகட்டத்தில் எப்போதோ கட்டமைக்கப்பட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ரத்தினநாயகர் அண்ட் சன்ஸ் என்ற பிரசுர நிறுவனத்துக்காக மாம்பழக்கவிசிங்கராயர் என்ற தொகுப்பாசிரியர்தான் இன்று சொல்லப்படும் பதினெண்சித்தர் என்ற வரிசையை உருவாக்கினார் என்கிறார்கள்.

அதற்கு முன் உதிரிப்பாடல்களாகவும் சிறிய நூல்களாகவும் சித்தர்பாடல்கள் மக்களிடையே புழக்கத்தில் இருந்தன. சித்தர்களில் எல்லா வகையினரும் உண்டு. தாயுமானவரைப்போல சைவசித்தாந்திகள் உண்டு.சிவவாக்கியரைப்போல

அத்வைதநோக்குடையவர்கள் உண்டு.ரசவாதிகளும் மருத்துவர்களும் உண்டு. அவர்களை உதிரி மறைஞானிகள் என்று சொல்லலாம். . சமூகத்துக்கு வெளியே வாழ்பவர்கள் இவர்கள். பற்றின்றி உடைமையின்றி வானமே கூரையாக அலைந்து திரிந்து வாழும் ஆன்மஞானிகள். சமணமதத்தின் உள்ள நிர்வாண அவதூதர் என்ற கருத்துருவத்தின் இன்னொரு வடிவம் இவர்கள்

சித்தர்கள் ஒட்டுமொத்தமாக ஒருவகையான சிந்தனைமரபையும் உருவாக்குவதில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு திசையினர். அவர்களைத் தொகுத்து ஒரு சித்தர்மதத்தைக் கட்டமைக்கும் முயற்சிகள் நூறாண்டுக்காலமாக நிகழ்கின்றன. நூற்றுக்கணக்கான நூல்கள் அதற்காக எழுதப்பட்டன , இப்போதும் எழுதப்படுகின்றன. தினமணி நூலரங்கத்தைப்பார்த்தால் ஒவ்வொருவாரமும் சித்தர்களைப்பற்றிய நூல்கள் பல வெளிவந்திருப்பதை நாம் காணலாம்.

சித்தர்மதம் என்பது ஒரு தூய தமிழர்மதமாக முன்வைக்கப்படுகிறது. அதற்கு லெமூரியாவிலிருந்தே வேர்கள் எடுக்கப்படுகின்றன. அது ஒரு ஆதிதமிழ் ஆன்மீகமாக விளக்கப்படுகிறது. ஆனாலும் அதற்கு ஒரு சாதிசார்ந்த சமூகப்பின்னணி இருப்பதை நாம் காணலாம்.சித்தர்களில் வைணவர்களே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பத்தொன்பதாம் நூற்றாண்டுக்குப்பின் உருவாகிவந்த இரண்டாவது புதிய விஷயம் என்பது மதம்சாரா ஆன்மீகத்துக்கான தேடல். மதம்சாராத அறத்தைக் கண்டடையவேண்டிய கட்டாயத்தில் இருந்து இது ஆரம்பிக்கிறது. இந்தத் தேடலின் விளைவாகவே திருக்குறள் ஒரு மதம்சாரா அறநூலாக முன்னிறுத்தப்பட்டது. திருக்குறளில் தெளிவாகவே தெரியக்கூடிய சமண அடையாளங்கள் இல்லாமலாக்கப்பட்டன. சொல்லப்போனால் அந்தத் தொடர்பு பற்றிப் பேசுவதே தவிர்க்கப்பட்டது.

சென்ற நூறாண்டுக்காலத்தில் குறள் பற்றி எழுதப்பட்ட நூற்றுக்கணக்கான நூல்கள் இவ்வாறு அதை ஒரு மதம் சாரா ஆன்மீகநூலாக விளக்கும் நோக்கம் கொண்டவை. ஆனால் இந்த மதம்சாரா ஆன்மீகத்தை இஸ்லாமியரும் கிறித்தவரும் பெரும்பாலும் எவரும் ஏற்றுக்கொண்டதில்லை என்ற யதார்த்தமும் இங்கே இருக்கிறது.

இதுதான் நாம் இருபதாம்நூற்றாண்டில் காலடி எடுத்துவைக்கும்போது நமக்குக் கிடைத்த ஆன்மீகத்தின் சுருக்கமான வரைபடம். நாம் கொண்டுள்ள ஆன்மீகம் இதில் எந்தச் சரடாக

இருந்தாலும் அதற்கு இரு கட்டங்கள் உள்ளன. அதன் நீண்ட பழங்கால வரலாறு ஒன்று. அது பத்தொன்பதாம்நூற்றாண்டு வாக்கில் தமிழ்ச்சூழலில் மறுவரையறைசெய்யப்பட்ட பின் கிடைக்கும் வடிவம் இன்னொன்று.நம்மிடமிருக்கும் எல்லா ஆன்மீகப்படிமங்களையும் இந்த நீண்ட வரலாற்று நோக்கில் வைத்துத்தான் நாம் பரிசீலிக்கவேண்டும். வரலாற்று நோக்குள்ள ஆன்மீகத்துக்கான அடிப்படைப்பார்வை அவ்வாறுதான் அமையமுடியும்

பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த மாபெரும் கூட்டுவிவாதம் தமிழ்ச்சமூகத்தின் ஆன்மீகத்தை வடிவமைத்தது. அதன் விளைவாக எழுதப்பட்ட பல்லாயிரம் நூல்கள் இன்று பெரும்பாலும் வாசிக்கப்படுவதில்லை என்பது உண்மை. அதன் முக்கியமான முகங்களான ஆறுமுகநாவலர், ஞானியார் சுவாமிகள், பிரதிவாதிபயங்கரம் அண்ணாங்கராச்சாரியார், கா.சு.பிள்ளை, திரு.வி.க போன்ற பலநூறுபேர் இன்று வெறும் பெயர்களாகவே அறியப்படுகிறார்கள் என்பதும் உண்மை. ஆனால் அந்த விவாதம் மூலம் உருவான கருத்துக்களும் படிமங்களும்தான் நம் ஆன்மீகத்தை ஆள்கின்றன.

அயோத்திதாசரின் பங்களிப்பு இந்த விவாதக்களத்தில்தான் நிகழ்ந்தது. அன்று பிரம்மாண்டமான அமைப்பு வலிமையுடன் சாதிப்பின்னணியுடன் நிகழ்ந்த அந்தப்பொதுவிவாதத்தில் தனிநபரான அவரது குரல் கரைந்து காணாமலாகியது. நூறாண்டுகளுக்கும் மேலாக அப்படி ஒரு குரல் ஒலித்த தகவலே எவருக்கும் தெரிந்திருக்கவில்லை. ஆனால் இன்று பார்க்கையில் அந்த பலவீனமான குரல் மிக முக்கியமான ஒரு மாற்றுவழியைக் காட்டுகிறதென்று புரிகிறது.

அத்துடன் அயோத்திதாசர் இந்த மாற்று ஆன்மீகம் சார்ந்து அதிகமொன்றும் எழுதிவிடவும் இல்லை. மிகக் குறைவாகவே எழுதியிருக்கிறார். பெரும்பாலும் மாற்றுத்தரப்புக்கான குறிப்புகள். இந்திரர்லோகசரித்திரம் போன்ற கொஞ்சம் புராணவிவரணைகள். குறளுக்கான விளக்கவுரைக்குறிப்புகள் கொஞ்சம் – அவ்வளவுதான். அவற்றில் இருந்து ஒரு முழுமையான கருத்துவடிவத்தை நாம் இன்று அறியகொள்ள முடியாது. ஒரு தரப்பை உருவாக்குவதற்கான தொடக்க முயற்சி மட்டும்தான் அது.

ஆகவே அயோத்திதாசரின் குறிப்புகளை மட்டும் பார்த்தால் அவற்றை நாம் முக்கியமானவையாகக் கருத முடியாது. ஆனால் அக்கால விவாதச்சூழலை முழுமையாக

உருவகித்துக்கொண்டு அச்சூழலின் பின்னணியில் அக்குரலை நிறுத்திப்பார்த்தால் மட்டுமே அதன் முக்கியத்துவத்தை உணர முடியும்.

அதாவது அயோத்திதாசர் என்ன சொன்னார் என்பதை விட எப்போது எந்த விவாதத்தின் பகுதியாக அவற்றைச் சொன்னார் என்பதே முக்கியம். ஆகவேதான அந்தப் பின்புலத்தை விவரிக்கவேண்டியிருக்கிறது. அந்தத் தரப்பு எந்த வகையில் முக்கியம் என்று சொல்லவேண்டியிருக்கிறது. ஆகவேதான் வரலாற்றுரீதியான ஆன்மீகம் பற்றிப் பேசவேண்டியிருக்கிறது. அயோத்திதாசரின் text ஐ விட அவர் பேசிய context ஐ முக்கியமாக முன்வைக்கவேண்டியிருக்கிறது.

ஏனென்றால் அயோத்திதாசர் முன்வைப்பது நம்முடைய ஆன்மீக வரலாற்றின் இன்னொரு பக்கம். இன்றும் வாழக்கூடிய, ஆனால் பேசப்படாத ஒரு பக்கம்.

## *[2]*

*நான் அயோத்திதாசரை வாசித்த நாட்களில் அவரது முக்கியத்துவம் ஏதும் என்னை வந்தடையவில்லை என்றுதான் சொல்லவேண்டும். அவரது ஒட்டுமொத்த எழுத்துக்களில் இருந்து ஒவ்வொரு தளத்திலும் அவரது கருத்து என்ன என்பதை தனித்தனியாக தொகுத்து அளிக்காத வரை எந்த பொதுவாசகரும் அவரது கருத்துநிலைகளை எளிதில் புரிந்துகொள்ளவும் முடியாது. அந்நாட்களில் நானும் எம்.வேதசகாயகுமாரும் இணைந்தே அயோத்திதாசர் நூல்களை வாசித்தோம். அவர் அனேகமாக தினமும் மாலை என் வீட்டுக்கு வருவார். நெடுநேரம் எங்கள் வாசிப்புகளை பகிர்ந்துகொள்வோம்*

*அக்காலகட்டத்தில் அயோத்திதாசர் சமணம் பௌத்தம் இரண்டும் தனித்தனி மதங்கள் அல்ல, ஒரேமதமே என்று சொல்வதைப்பற்றிய பேச்சுவந்தது. அயோத்திதாசர் காலகட்டத்தில் விரிவான வரலாற்றாய்வுகள் நிகழவில்லை. தனக்குக்கிடைத்த குறைவான தரவுகளைக்கொண்டு அவர் அப்படி ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார் என்பதே என்னுடைய கருத்தாக இருந்தது. அதை வேதசகாயகுமாரும் ஏற்றுக்கொண்டார்.*

*ஆனால் அதன்பின் நானும் என் நண்பர்களும் காரிலேயே ஓர் இந்தியப்பயணம் மேற்கொண்டோம். அப்பயணத்தில் நான் ஓர் ஆச்சரியமான விஷயத்தை கவனித்தேன். பெரும்பாலான பௌத்த தலங்கள் சமணத்தலங்களும்கூட. பெரும்பாலான சமணக்கோயில்கள் அருகே பௌத்த ஆலயங்களுமிருந்தன. இந்திய வரலாற்றில் சமணரும் பௌத்தரும் பூசலிட்டதாக எந்த குறிப்பும் இல்லை.*

*சென்றவருடம் இந்தியாவின் சமணத்தலங்கள் வழியாக ஒருமாதம் நீண்டு நின்ற ஒரு பயணத்தை மேற்கொண்டோம். ஈரோட்டின் அரச்சலூர் முதல் ராஜஸ்தானின் லொதுவாரா வரை. இப்பயணத்தில் திட்டவட்டமாக ஒன்றைக் கண்டோம். இந்தியாவெங்கும் சமணத்தலங்களும் பௌத்த தலங்களும் ஒன்றே. இரு வழிபாட்டிடங்களும் அருகருகேதான் இருந்தன. பல இடங்களில் ஒரே வழிபாட்டிடத்தில் இரு சமயத்தினரும் வழிபட்டிருக்கிறார்கள்.*

இரு வேறு உண்மைகள். நுல்கள் வழியாகப்பார்த்தால் சமணமும் பௌத்தமும் வெவ்வேறுதான். அனாத்மவாதம் பேசுவது பௌத்தம்சர்வாத்மவாதம் பேசுவது சமணம். பௌத்தம் ஆன்மா இல்லை என்கிறது. சமணம் எல்லாவற்றுக்கும் ஆன்மா உண்டு என்கிறது. நேர் தலைகீழ். இந்தியமரபில் இந்த அளவுக்கு எதிரும்புதிருமான கொள்கைகள் குறைவே. ஆனால்ந் நடைமுறையில் அவை இரண்டும் ஒரேமதமாக இருந்தன என்பதை கண் காட்டித்தருகிறது

நாம் நூல்களில் வாசித்து அறியும் இந்திய வரலாற்றுக்கும் நேரில் சென்றால் கண்ணுக்குப்படும் வரலாற்றுக்கும் மிகப்பெரிய ஓர் இடைவெளி இருப்பதை எப்போதுமே காணலாம். அதற்கு காரணம் நவீன இந்தியவரலாறு என்ற மொழிபின் முன்வடிவம் என்பது இந்தியாவை ஆண்ட காலனியாதிக்கவாதிகளால் உருவாக்கப்பட்டது என்பதுதான். 1920 ல் வெளிவந்த The Cambridge history of India இந்தியவரலாற்றை எழுத ஒருமுழுமையான வரைபடத்தை உருவாக்கியளித்தது. அதன்பின்னர் எழுதப்பட்ட வரலாறுகளெல்லாமே அந்த தடத்தை பின் தொடர்ந்து அவ்வரைபடத்தை முழுமைசெய்தவைதான்.

இந்தியவரலாற்றை ஒன்றை ஒன்று முரண்பட்டு வென்றழிக்க முயன்ற பல்வேறு சக்திகளின் களமாக பார்ப்பதுதான் அந்த அணுகுமுறையின் அடிப்படை நோக்கு என்று சொல்லலாம். அவர்களின் ஒட்டுமொத்த வாழ்க்கைநோக்கே அதுதான். முதலில் எதையும் பல்வேறு கூறுகளாக பிரித்துக்கொள்கிறார்கள். அதன்பின் அக்கூறுகளின் தனித்தன்மைகளை வகுக்கிறார்கள். அக்கூறுகளுக்கிடையே உள்ள உறவுகளை தொகுக்கிறார்கள். அக்கூறுகளை பல குழுக்களாகவும் தரப்புகளாகவும் மாற்றிக்கொள்கிறார்கள். ஒரு விரிந்த முரணியக்கச்சித்திரத்தை உருவாக்கிக் கொள்கிறார்கள்.

அவர்களின் வரலாற்றை மறுத்து நேர் எதிர்வரலாற்றை உருவாக்கிய இந்திய தேசியமறுமலர்ச்சி யுகத்தின் வரலாற்றாசிரியர்களும் அதே வரலாற்றெழுத்துமுறைகளைத்தான் கடைப்பிடித்தார்கள். நேர் எதிரான கோணத்தை முன்வைத்தார்கள் அவ்வளவுதான். பின்னர் வந்த மார்க்ஸிய வரலாற்றாசிரியர்களும் விளிம்புநிலை வரலாற்றாசிரியர்களும் அந்த வரைபடத்தை ஒட்டியே முன்னகர்கிறார்கள்.

என் பயணத்தில் கண்ட இந்திய யதார்த்தம் என்னை திரும்பத்திரும்ப யோசிக்கச்செய்தது. நாம் சரியாகத்தான் நம் வரலாற்றை எழுதிக்கொண்டிருக்கிறோமா? இங்கே முதலில் ஓர்

ஆடுகளம் வரையப்பட்டு ஆட்டவிதிகளும் உருவாக்கப்பட்டுவிட்டது. அந்த ஆட்டத்தில் நாம் ஆடி ஆட்டத்தை உருவாக்கியவர்களையே வென்றாலும்கூட இது நம்முடைய ஆட்டம் அல்ல.

ஓர் இலக்கியவாதியாகவும் வரலாற்று மாணவனாகவும் இந்த ஆட்டத்தின் நிலைபெற்றுவிட்ட விதிகள் மீது எனக்கு ஐயமிருக்கிறது. என்னுடைய தாத்தாவோ என் ஊரின் கோயில்பூசாரியோ எங்களூருக்கு மலையிறங்கி வரும் மலையனோ இப்படி ஒரு வரலாற்றை எழுதியிருக்க மாட்டார்கள் என்று எனக்குப்படுகிறது. இந்த வரலாறு அவர்களுக்குப்புரியாதென்றும் படுகிறது.

இப்படிச் சொல்கிறேன். இங்கே எழுதப்பட்ட வரலாறுகள் மூன்று வகை. அரசியல் வரலாறு, சமூக வரலாறு, பொருளியல் வரலாறு. அவற்றையே முறையே கேம்பிரிட்ஜ் பள்ளி, தேசியப்பள்ளி, மார்க்ஸியப்பள்ளி என்கிறார்கள். நான் தேடுவது ஆன்மீகத்தின் வரலாற்றை. கடவுளின், மதத்தின் வரலாற்றை அல்ல. நாம் நம்மதென்று இன்றுகொண்டிருக்கும் ஆன்மீகம் வரலாற்றினூடாக விளைந்து வந்த வரலாற்றை.

அந்த வரலாறு எனக்கு தேவைப்படுகிறது. என் கையிலிருக்கும் சொற்களையும் படிமங்களையும் புரிந்துகொள்ள. தர்மம் என்றும் கர்மம் என்றும் நியமம் என்றும் சத்யம் என்றும் என்னிடம் வந்திருக்கும் சொற்களின் வரலாறு. என்னுடைய தெய்வங்களின் வரலாறு. அந்த வரலாறு நம் எழுதப்பட்ட வரலாற்றுநூல்களில் இல்லை.

அப்படியென்றால் உண்மையில் முக்கியமான ஏதோ ஒன்றை நாம் இழந்திருக்கிறோம். நம்முடைய வரலாற்றை முற்றிலும் நம்முடைய முறைமையைக்கொண்டு, நம்முடைய மொழியையும் படிமங்களையும்கொண்டு நாம் எழுதியிருக்கமுடியும் என்று தோன்றுகிறது. ஆனால் அந்த வழி எது? அந்த வாசல் எது? தெரியவில்லை.

அங்கீகரிக்கப்பட்ட வரலாற்றின் எல்லா வழிகளையும் அதற்காக மீறிப்பார்க்கலாமென்று தோன்றுகிறது. ஒரு மாறுதலுக்காக கூரையைப் பிய்த்துக்கொண்டு ஒரு வாசலை போட்டுபபர்த்தாலென்ன என்று தோன்றுகிறது. இலக்கிய ஆசிரியனாக எனக்கு அதற்கான சுதந்திரம் இருக்கிறது. வரலாற்றை தன் நோக்கில் முழுமை செய்வதையே எல்லா எழுத்தாளர்களும் செய்கிறார்கள்.

நானும் அதையே செய்தேன். என் நோக்கில் நான் என்னுடைய கற்பனையை எல்லா கோணங்களிலும் இழுத்து பின்னி உருவாக்கிய இன்னொருவரலாறுதான் விஷ்ணுபுரம். இன்னொரு வரலாறுதான் கொற்றவை. இன்னும் சில வரலாறுகளை நான் எழுதக்கூடும்.

என்னுடைய ஆர்வமும் தேடலும் ஆன்மீகத்தையே முதன்மையாக காண்பது என்றேன். வரலாற்றினூடாக மானுடன் அடைந்த மெய்ஞானத்தையே நான் தேடுகிறேன். ஆகவே நான் எழுதியவை ஆன்மீகத்தின் வரலாறுகள்தான். பி.கே.பாலகிருஷ்ணன் இருபத்தைந்தாண்டுகளுக்கு முன் சொன்னதை என் எழுத்துக்கள் மூலம் செய்திருக்கிறேன். விஷ்ணுபுரம் வெளிவந்தபோது அவர் உயிருடனில்லை. இருந்திருந்தால் அவரிடம் அதைக்கொண்டு சென்று காட்டியிருப்பேன்.

அப்படி இந்தியவரலாறு என்ற இந்த மூடிய அறையின் சுவர்களில் கூரையில் முட்டிக்கொண்டிருந்தபோதுதான் நான் அயோத்திதாசரை கண்டுகொண்டேன். அறிஞர்கள் பேராசிரியர்கள் ஆய்வாளர்கள் நிறைந்த பெரும் கூட்டத்தில் நடுவே என்னுடைய சொந்த ஊரில் இருந்து கிளம்பிவந்த ஒரு சித்தவைத்தியர் போல அவர் பேசுவதைக் கேட்டேன். அவர் பேசும் மொழி என்னுடையது என்று பட்டது. அவர் இங்கிருந்துகொண்டு பேசுவதாக எண்ணினேன். அவரது வரலாற்றெழுத்து ஒரு முற்றிலும் புதிய வழி என்று எண்ணினேன்

*

என்னுடைய குலதெய்வத்தின் பெயர் நீலகேசி. எங்கள் பக்கத்தில் பல நீலகேசியம்மன்கள் இருக்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு கதை இருக்கிறது. பல கதைகளில் ஒரு குடும்பத்தில் உள்ள கன்னிப்பெண் நீலகேசியாக ஆகிவிட்டதாகச் சொல்லப்படும். பெரும்பாலான கோயில்களில் நாரால்செய்யபப்ட்ட தேவியின் கூந்தல் மட்டுமே பிரதிஷ்டைசெய்யப்பட்டிருக்கிறது.

நீலகேசி அல்லது நீலிக்கு சில வர்ணனைகள் உண்டு. கன்னி. கன்னங்கரியவள். நீல நிறமான கேசம் கொண்டவள். குருதி நிறமான உதடுகள் கொண்டவள்.. நீலகேசம் என்பது காட்டை குறிக்கக்கூடிய சொல். நீலகேசி என்பது புராதனமான ஒரு வனதெய்வமாக இருக்க வாய்ப்புண்டு.

ஆனால் நம் இலக்கியங்களில் நீலகேசி ஒரு சமண தெய்வம். நீலகேசி என்ற சமணக்காப்பியத்தில் அவளுக்கொரு கதை சொல்லப்பட்டுள்ளது. ஒரு வணிகனால் கொல்லப்பட்ட அவன் மனைவி கொலைத்தெய்வமாக மாறி வழிப்போக்கரை பலிகொண்டு வந்தாள். அவள் ஒரு சமனமுனிவரை பலிகொள்ளப்போகையில் அவர் அவளை நல்வழிப்படுத்தினார். அவள் சமணக்கருத்துக்களை கற்றுத்தேர்ந்து பிறசமயத்தவரை வாதில் வென்று சமணத்தை நிலைநாட்டியபின் முக்தியடைந்தாள் என்பது கதை. இந்தக்கதை இப்படியே குமரிமாவட்டத்தில் கள்ளியங்காட்டுநீலி கதையாகச் சொல்லப்படுகிறது.

ஆக, நீலகேசியம்மன் சமணர்களின் காலகட்டத்திலேயே இருந்திருக்கிறாள். அப்போதே ஒரு தொல்பழந்தெய்வமாக கருதப்பட்டிருக்கிறாள். அந்த தெய்வத்தை சமணம் தன்னுடைய சிறிதெய்வங்களில் ஒன்றாக ஆக்கிக்கொண்டது. அதைத்தான் நீலகேசியம்மனை சமண முனிவர் அறம்கூறி வசப்படுத்தியதில் காண்கிறோம். பிறகு சமணபௌத்த மதங்கள் மறைந்தபின் அவள் சிறுதெய்வமாக, குலதெய்வமாக நீடிக்கிறாள்.

ஆனால் இருகதைகள் மேலும் முக்கியமானவை. இட்டகவேலி முடிப்புரை நீலகேசி அம்மன் ஒரு நாயர் குல கன்னிப்பெண். பக்கத்திலிருந்த தீண்டத்தாகாத வீட்டுக்கு தீ வாங்கச்சென்றவள் அங்கே எதையோ வாங்கித்தின்றதாக குற்றம்சாட்டப்படுகிறாள். அதன்பொருட்டு கொல்லப்படுகிறாள், நீலகேசியாகிவிடுகிறாள். இந்த நிகழ்ச்சி உண்மையில் நடந்திருக்கலாம். அந்த சிறுமி ஏன் வேறுதெய்வமாக அல்லாமல் நீலகேசியாக்கப்பட்டாள்?

அதற்கு விடைகூறுகிறது ஒரு கதை. திருவட்டார் ஆதிகேசவன் கேசி என்ற பெண் அரக்கியை வதம்செய்தார். அவளை அழிக்கமுடியாது. ஆகவே கேசியை அவர் மண்ணுக்குள் புதைத்து அவள் மேல் அரவணையில் பள்ளிகொண்டார். அந்த மண்ணுக்குள் கரியவேர்களாக அவள் பரவியிருக்கிறாள். அவளுக்கும் இன்று பூசைகள் செய்யப்படுகின்றன.

மண்ணுக்குள் வேராக இருக்கும் நீலி. கன்னங்கரிய வனதேவதை. என்னுடைய கனவுகளின் சிறுவயதிலேயே குடியேறியவள். என்னுடைய வரலாற்றில் மிக முக்கியமான பெயர் இவளுடையதுதான். நானறிய விரும்பும் வரலாறு இவளுடையதுதான்.ஆனால் இவளை எந்த வரலாற்றுநூலிலும் நான் காணமுடியாது.

ஆகவே இவள் வரலாற்றை நான் எழுதினேன். விஷ்ணுபுரமும் கொற்றவையும் காடும் எல்லாம் நீலியின் கதைகள்தான். விராடரூபம்கொண்ட விஷ்ணுவின் நகரம் ஒரு சிறு குமிழி போல நீலியின் காலடியில் வெடித்தழிகிறது. கொற்றவையில் பேயும் அன்னையுமாக வந்து கண்ணகிக்கு நெறியுரைப்பவள் அவளே.

இந்த வரலாற்றை நான் எழுதுவதற்கான ஒரு முன்னுதாரண வரைபடத்தை எனக்களிப்பவர் அயோத்திதாசர். ஆகவேதான் தமிழின் அவரை ஒரு மாற்று வரலாற்றெழுத்தின் முதல்புள்ளி என்று நினைக்கிறேன்.

*

அயோத்திதாசர் பற்றிய தன்னுடைய சிறிய நூலில் பேராசிரியர் ராஜ்கௌதமன் அயோத்திதாசரின் 'முறையான வரலாற்றுநோக்கு இல்லாமை'யை அவரது முக்கியமான குறையாகச் சுட்டிக்காட்டுவதைக் காணலாம். கல்வித்துறைசார்ந்த இலக்கிய- வரலாற்று அணுகுமுறைக்குச் சிறந்த உதாரணமான ராஜ்கௌதமன் அப்படிச்சொல்வது இயல்பே. அயோத்திதாசரின் நோக்கம் சாதியற்ற சமகாலத்தை உருவாக்குவது. அதற்காக அவர் இறந்தகாலத்தைப்பற்றி தனக்குச் சாதகமான முறையில் புனைந்துகொள்கிறார் என்கிறார் ராஜ்கௌதமன்[ க.அயோத்திதாசர் ஆய்வுகள், காலச்சுவடு பிரசுரம்] அயோத்திதாசரின் இந்திரர்லோகசரித்திரம் முதலிய நூல்களையும் பல வரலாற்றுக்கருத்துக்களையும் எதிர்மறைப்பொருளில் புனைவு என்று சொல்கிறார்

ராஜ்கௌதமன் சொல்லும் அந்த அம்சமே எனக்கு முக்கியமானது என்பதைத்தான் நான் சுட்டவிரும்புகிறேன். புறவயமான தரவுகளைக் கொண்டு வரலாற்றின் மிகப்பெரிய முரணியக்கத்தின் சித்திரம் ஒன்றை உருவாக்குவதையே முறையான வரலாற்றுஎழுத்து என ராஜ்கௌதமனும் அவரைப்போன்ற அறிஞர்களும் எண்ணலாம். ஆனால் அழியாமல் நீடிக்கும் படிமங்களைக்கொண்டு கற்பனையையும் உள்ளுணர்வையும் கலந்து உருவாக்கப்படும் வரலாறுகள் மேலும் முக்கியமானவை என நான் நினைக்கிறேன்.

அவற்றை வரலாறுகள் என்று சொல்லமுடியாது என்றால் புராணங்கள் என்று சொல்லலாம். அப்படி ஒரு வரலாற்றெழுத்து முறை நமக்கிருக்கிறது. அதற்கு இன்றையநாம் இன்று கையாளும் நவீன ஐரோப்பிய வரலாற்றெழுத்துமுறைக்கு இல்லாத பல சாத்தியக்கூறுகள் இருக்கின்றன . பல ரகசிய வழிமுறைகள் உள்ளன. அந்த வழியை

நாம் முழுமையாக இழக்கவேண்டியதில்லை. அதனூடாக நாம் நம்மை கண்டடைய முடியும். மையப்போக்கு வரலாற்றெழுத்து தவறவிடக்கூடிய பலவற்றை தொட முடியும்

அப்படித்தொடுவனவற்றில் மிகமுக்கியமானது ஆன்மீகம். ஐரோப்பிய வரலாற்றெழுத்தில் இருந்து கிடைத்த புறவயமான வரலாறு என்ற ஓர் உருவகம் நம்முடைய வரலாற்றுப்பிரக்ஞையை ஆள்கிறது. அது இரும்பாலான ஒரு சட்டகமாகவே மாறி நம் முன் நிற்கிறது. அந்த கட்டாயம் காரணமாக நாம் மீண்டும் மீண்டும் 'ஆதாரங்களுக்கு' செல்கிறோம். கல்வெட்டுகளும் தொல்பொருட்சான்றுகளும் ஆதாரங்கள். அதன்பின் நூல்கள் ஆதாரங்கள். ஆனால் கண்ணெதிரே நிற்கும் நீலகேசி அம்மன் ஆதாரம் அல்ல

அந்த வரலாற்றெழுத்துமுறையைக்கொண்டு நாம் ஆதிகேசவனின் வரலாற்றை எழுதிவிடலாம். ஒருபோதும் அவர் காலடிமண்ணுக்குள் வேராகப்பரவிய நீலகேசியம்மனின் வரலாற்றை எழுதிவிடமுடியாது. புறவயமான வரலாறு என்கிறார்கள். முழுக்கமுழுக்க தொல்பொருள்-இலக்கிய ஆதாரங்களுடன் புறவயமாக எழுதப்பட்டதுதானே நம்முடைய சைவமேலாதிக்கவாதிகள் எழுதியளித்துள்ள வரலாறு? அப்படியென்றால் புறவயமானதென்றால் என்ன?

ஆப்ரிக்காவில் சென்ற நூற்றாண்டில் கறுப்பர்கள் சொல்வது சாட்சியமல்ல என்று கருதப்பட்டது. எஞ்சிய வெள்ளையர்களைக்கொண்டு எல்லாவகையிலும் பிரிட்டிஷ்பாணியிலான நீதியமைப்பு செயல்பட்டது. அவர்கள் அதை புறவயமான நீதி என்றுதான் சொன்னார்கள். அதேபோன்றதே நம்முடைய வரலாற்றெழுத்தும். நாம் வரலாறை எழுத மிக முக்கியமான சாட்சியங்களை அளிக்கும் ஒரு பெரிய உலகம் அவை சாட்சியங்களே அல்ல என்று சொல்லி வெளியேதள்ளப்பட்டுவிட்டது. எஞ்சியவற்றைக்கொண்டுதான் இந்த புறவயமான வரலாற்றை உருவாக்குகிறார்கள்.

இந்த புறவயமான வரலாற்றெழுத்துக்கு எதிரான முக்கியமான கலகக்குரல் என்று அயோத்திதாசரைச் சொல்வேன். இங்கே ஐரோப்பியபாணியிலான வரலாற்றெழுத்து உருவான ஆரம்பகாலத்திலேயே அயோத்திதாசர் அதற்கு மாற்றான இந்த புராணவரலாற்றெழுத்தை உருவாக்கி முன்வைத்திருக்கிறார் என்பது மிகவியப்பூட்டுவதாக இருக்கிறது. நம்முடைய மதங்கள் மறுவரையறை செய்யப்பட்ட, நம் ஆன்மீகம் நவீனப்படுத்தப்பட்ட காலகட்டத்தில் பண்டிதரின் இந்தக்குரல் எழுந்திருக்கிறது.

ஜெ.எச்.நெல்சனின் மதுரா கண்ட்ரி மானுவல் நூலில் தென்னகவரலாறு பற்றிய ஒரு முன்வரைவு உள்ளது. தென்னகவரலாற்றைப்பற்றிய தொடக்ககால வரலாற்றெழுத்து என அதைச் சொல்லலாம். முழுக்கமுழுக்க காலனியாதிக்க நோக்கில், ஐரோப்பிய வரலாற்றெழுத்துப்பாணியில் எழுதப்பட்ட நூல். அற்புதமான வாசிப்பனுபவத்தை அளிக்கக்கூடிய ஒரு கிளாஸிக் அது

1868 ல் அதுவெளிவந்தது. நண்பர்களே, இன்று இந்த 2012ல் , நீலகண்டசாஸ்திரி, சதாசிவப்பண்டாரத்தார், கே.கே.பிள்ளை என இரண்டுதலைமுறை வரலாற்றாசிரியர்களின் காலம் கடந்தபின்னும், நம்முடைய ஒரு வரலாற்று நூலை எடுத்துப்பார்த்தால் அதில் 90 சதவீதம் நெல்சன் எழுதியவையே உள்ளன என்பதைக் காணலாம். ஆமாம், நாம் நெல்சன் எழுதிய சிலவற்றை மேம்படுத்தி மேலும் த்கவல்கள்சேர்த்து செறிவாக்கிக்கொண்டோம் அவ்வளவுதான்.

நெல்சன் எப்படி வரலாற்றை எழுதினார்? அவரைச்சூழ்ந்திருந்த தமிழக உயர்குடியினர் அவருக்குச் சொன்ன தரவுகளைக்கொண்டு அவ்வரலாற்றை எழுதினார். அவரிடமிருந்தது ஐரோப்பிய வரலாற்றெழுத்தின் முறைமையும் சிறந்த மொழிநடையும். அது இவர்களிடமில்லை. அந்த வரலாற்றில் இங்குள்ள அடித்தளமக்களின் வரலாறென்பதே இல்லை. இன்றும் இல்லை. அது ஆதிகேசவனின் வரலாறு. கேசியின் வரலாறல்ல.

நெல்சனின் நூல் வெளிவந்த காலகட்டத்தில் நம்முடைய சைவ,வைணவ மறுமலர்ச்சி இயக்கம் ஆரம்பித்துவிட்டது. சைவமும்தமிழும் வெவ்வேறல்ல என்பதுபோன்ற வரலாற்றுச்சூத்திரங்கள் பிறந்துவிட்டன. அந்தச்சூழலில்தான் அயோத்திதாசர் அவரது ஆரம்பகட்ட வரலாற்றெழுத்துக்களை முன்வைக்கிறார். நான் ஏற்கனவே சொன்னதுபோல அவை முழுமையான எழுத்துக்கள் அல்ல. மிக ஆரம்பகாலகட்ட முயற்சிகள் மட்டுமே. ஆனால் அவை முன்னோடியானவை. முன்னோடிகளுக்குரிய எல்லா தாவல்களும் மீறல்களும் பிழைகளும் கொண்டவை. ஆனால் முன்னோடிகளே பண்பாட்டை வழிநடத்துகிறார்கள்

*

அயோத்திதாசர் அவர்களின் இந்திரர்லோகசரித்திரம் நவீன வாசனுக்குஒரு விசித்திரமான நூல். அதில் எது புறவயமான வரலாற்றுத்தரவு எது படிமம் எது ஆய்வுமுடியு எது உள்ளுணர்வின் விளைவான தரிசனம் என்று அவனால் கண்டுபிடிக்கமுடியாது. ஆனால்

நம்முடைய மரபான புராணங்களை வாசிப்பவர்களுக்கு அது ஒன்றும் விசித்திரமாகவும் இருக்காது. உதாரணமாக மணிமேகலையை வாசிக்கும் ஒருவன் இந்த எல்லைக்கோடுகளை எங்கே கண்டுபிடிப்பான்? மணிமேகலையை கற்ற ஒருவனுக்கு இந்திரர்லோக சரித்திரம் வியப்பை அளிக்காது. அதன் இன்றியமையாத சமகால நீட்சி என்றே அவன் இந்திரர்லோக சரித்திரத்தைச் சொல்லிவிடுவான்.

இந்திரர்லோக சரித்திரம் மரபான புராணமுறையில் ஆரம்பிக்கிறது.ஒரு புராணத்தை முன்வைக்கிறது. இந்தியா முன்னர் இந்திரர்தேசம் என்று பெயர்பெற்றிருந்தது. இந்த தேசத்தில் மக்கள் சிறப்பான வாழ்க்கையை வாழ்ந்துவந்தார்கள். சமத்துவமும் நீதியும் திகழ்ந்தகாலகட்டம் அது. காரணம் அப்போது பௌத்தம் இங்கே சிறந்திருந்தது. மதுமாமிசம் உண்ணும் வழக்கம் இருக்கவில்லை.

அன்று நந்தன் என்ற பௌத்த மன்னன் புனல்நாட்டுக்கு கிழக்கே வாதவூர் என்ற நாட்டை ஆண்டுவந்தான். அப்போது பாரசீகநாட்டிலிருந்து சிலர் அங்கே வருகிறார்கள். அன்று இந்திரர்தேசத்தில் அர்ஹதர்கள் மட்டுமே அந்தணர்கள் என்று கருதப்பட்டார்கள். வந்தவர்கள் அர்ஹதர்களைப்போல வேடமிட்டு வந்து அவர்களைப்போலவே பேசுகிறார்கள். ஐயமடைந்த நந்தன் தன்னுடைய நாட்டின் தர்மசபையைக்கூட்டி அவர்களைக்கொண்டு விசாரிக்கிறான். அவர்கள் வேஷதாரிகள் என தெரியவருகிறது.

ஆகவே வேடதாரிகள் நந்தனைக் கொன்றுவிடுகிறார்கள். அவர்களுக்கு மொழிகளை கற்கும் திறன் மிகுந்திருந்தது. ஆகவே இங்குள்ள மொழிகளை அவர்கள் கற்றுத் தேர்ந்தார்கள். ஆனால் சோமபானம், சுராபானம் முதலியவற்றின் உதவியால் அவர்கள் இங்கே ஆட்சியாளர்களை தன்வயபப்டுத்தினார்கள்.மொழித்திறனால் மெல்லமெல்ல அவர்கள் இந்த தேசத்து சாத்திரங்களை ஊடுருவினார்கள். சாதிபேதங்களை கற்பித்தார்கள். அவ்வாறாக இந்திரர்தேசம் வீழ்ச்சியடைந்து அன்னியருக்கு அடிமையானது.

இந்த அன்னியரை அயோத்திதாசர் வேஷபிராமணர் என்கிறார். இவர்கள் பௌத்தர்களின் குறியீடுகளையும் சடங்குகளையும் கொள்கைகளையும் கவர்ந்து தங்களுக்கேற்றமுறையில் திரித்துக்கொண்டார்கள் என்று சொல்கிறார்.பௌத்தசமணத் துறவிகள் கல்விகற்க ஆரம்பிக்கும்போது கண்கள் பெறுகிறார்கள் என்ற பொருளில் உபநயனம் என்ற சடங்கு கொண்டாடப்பட்டது. அப்போது அவர்கள் பூணூல் அணிவது வழக்கம். அவ்வழக்கம் வேஷபிராமணர்களால் கையகப்படுத்தப்பட்டது

வேஷபிராமணர்கள் மதுமாமிசம் உண்பவர்கள். ஆனால் பௌத்தசமண மதங்களின் ஆசாரங்களை தங்கள் நெறிகளாக அவர்கள் பிரச்சாரம்செய்தார்கள். ஆனால் வேள்வித்தீயில் மாமிசத்தை படைத்து உண்பதை தங்கள் வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

இச்சைகளை ஒடுக்குவதற்காக பலவகையான நோன்புகளை கைகொள்வது பௌத்தசமணர்களின் வழக்கம். அந்நோன்புகளை எல்லாம் வேஷபிராமணர் தங்களுடையதாக்கினர். பௌத்தர்கள் கொண்டாடிவந்த பண்டிகைகளையும் தங்களுடையதாக ஆக்கிக் கொண்டார்கள். தீபாவளி முதலியவை அவ்வாறு அவர்களால் எடுத்துக்கொள்ளப்பட்டன. அரசமரம், தாமரை,வேப்பமரம் என வேஷப்பிராமணர் கொண்டுள்ள எல்லா குறியீடுகளும் பௌத்தத்தில் இருந்து எடுக்கப்பட்டவையே.

வேஷபிராமணர்களுக்கு ஆலயவழிபாட்டு முறை இருக்கவில்லை. பரிநிர்வாணம் அடைந்த புத்தரை சிலைவடித்து குகைகளிலும் கோட்டங்களிலும் வைத்து வழிபடுவது பௌத்த மரபு. வேஷபிராமணர் அவர்களும் கோயில்களைக் கட்டி அங்கே தங்கள் தெய்வங்களையும் புத்தரைப்போல யோகத்தில் அமரச்செய்தார்கள். அவர்களின் தெய்வங்களின் புராண இயல்புகளுக்கும் யோகத்துக்கும் சம்பந்தமே இல்லை. மெல்லமெல்ல அவர்கள் பௌத்த ஆலயங்களையும் கைப்பற்றிக்கொண்டார்கள்.

இப்படி ஒரு விரிவான சித்திரத்தை அயோத்திதாசர் அளிக்கிறார். தகவல்களை கொண்டு செய்யப்படும் ஒரு புனைவு என்றே இதைச் சொல்லலாம். குறியீடுகள் புதியகோணத்தில் விளக்கப்படுகின்றன. சொற்கள் புதியவகையில் பொருள்கொள்ளப்படுகின்றன. புனைவை பலகோணங்களில் விரித்து ஒரு முழுமையான வரலாற்றுச்சித்திரத்தை அயோத்திதாசர் உருவாக்குகிறார்.

இதை அயோத்திதாசர் முன்வைக்கும் ஒரு பதிலிவரலாறு என்று சொல்லலாம். அவர் கூறும் அந்த பௌத்த பொற்காலம் இருபதாம்நூற்றாண்டின் சமத்துவம் சார்ந்த கருத்துக்களை இறந்தகாலத்துக்குக் கொண்டுசெல்லும் உத்தி , அது ஒரு வெறும் இலட்சியக்கனவு மட்டுமே என்று சொல்லலாம். ஆனால் இந்தக்கதையின் வடிவம் மிகத்தொன்மையானது. ஓர் உதாரணம், கேரளத்தில் பிரபலமாக உள்ள திருவோணத்தின் கதை. மாபலி என்ற மாமன்னன் ஆண்ட காலத்தை அது விதந்தோதுகிறது.

*‘மாபலி நாடு வாணிடும் காலம் மானுஷரெல்லாரும் ஒந்நுபோலே*
*கள்ளமில்ல சதிவுமில்ல எள்ளோளமில்ல பொளிவசனம்*

*[மாபலி நாடு ஆண்ட அக்காலத்தில் மனிதர்களெல்லாரும் சரிநிகர்*
*கள்ளமில்லை சதியில்லை எள்ளளவும் இல்லை பொய்பேச்சு]*

*பதினைந்தாம் நூற்றாண்டுமுதலே இருந்துவரக்கூடிய இந்தப்பாடல் அயோத்திதாசர் சொல்லும் அதே பொன்னுலகைத்தானே சொல்கிறது? மாபலியின் பொற்கால ஆட்சியைக் கண்டு இந்திரன் பொறாமை கொள்கிறான். ஆயிரம் வருடம் அப்படி மாபலி ஆண்டால் இந்திரசிம்மாசனத்துக்கு அவன் உரிமைகொண்டாடமுடியும். ஆகவே அவன் விஷ்ணுவிடம் முறையிடுகிறான். விஷ்ணு குறுகியதோற்றமுள்ள பிராமணனாக, ஓலைக்குடை கையில் ஏந்தி வந்து மாபலியிடம் மூன்றடி மண்ணை தானமாக கேட்கிறார். கேட்பவருக்கு இல்லை என்று சொல்லாத மாபலி அந்த மூன்றடி மண்ணை அளிக்கிறான். இரண்டடியில் முழு உலகையும் அளந்த வாமனன் மூன்றாவது அடியை மாபலி தலையில் வைத்து அவனை பாதாளத்துக்கு தள்ளுகிறான்.*

*சுவாரசியமான ஒரு தகவலுண்டு. திருவோணம் நெடுங்காலம் தாழ்த்தப்பட்ட மக்கள் மட்டுமே கொண்டாடும் விழாவாகவே இருந்தது. பதினெட்டாம்நூற்றாண்டில்கூட விவசாயக்கூலிகளான தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உரிமையாளர்கள் பரிசுகள் கொடுக்கும் விழாவாகவே அது பல இடங்களில் நீடித்தது. திருவோணம் பற்றிய பாடல்களும் புராணங்களும் தாழ்த்தப்ப்பட்ட மகக்ளிடையே இருந்தவைதான். அயோத்திதாசர் சொல்லும் இந்திரர்தேசத்துசரித்திரம் அப்படியே திருவோணத்தின் கதை என்றால் என்ன பிழை?*

*மாபலியை அசுரன் என்று புராணம் சொல்கிறது. சுரன் என்றால் மனிதன். மனிதனல்லாதவன் என்று அச்சொல்லுக்குப் பொருள். அயோத்திதாசர் இந்திரர்லோக சரித்திரத்தில் வேறுபொருள் அளிக்கிறார். சுரபானம் குடிப்பவன் சுரன். குடிக்காதவன் அசுரன். பௌத்தர்களே அப்படி அழைக்கப்பட்டார்கள் என்கிறார்.*

*மாபலியின் வரலாற்றையே அயோத்திதாசர் வேறுவகையாக விளக்குகிறார். 1200 வருடம் முன்பு மாபலிபுரம் என்ற பகுதியில் இருந்து தென்னகத்தை ஆண்ட பௌத்த மன்னன் அவன் என்கிறார். இவன் இறுதியில் பௌத்த சங்கத்தில் சேர்ந்து புரட்டாசி மாதம் அமாவாசைநாளில் திருவேங்கட மலையில் நிர்வாணம் எய்தினான்.இவனுடைய மகன்*

திருப்பாணர். மகள் தாதகை. இவள் ஒரு பௌத்த பிக்குணி. மாவலி நிர்வாணமடைந்த நாளை பௌத்தர்கள் மாபலி அமாவாசை என்று கொண்டாடினர். அதைபின்னர் வைணவம் மகாளய அமாவாசையாக கொண்டாடுகிறது என்கிறார்.

நாம் முக்கியமாக கவனிக்கவேண்டியது, இத்தகைய வரலாற்றெழுத்துக்கான பெறுமானம் என்ன என்பதுதான். வரலாறு என்பது ஒற்றைப்படையான ஒரு கட்டுமானம் அல்ல அது ஓர் உரையாடல் என்று எடுத்துக்கொண்டால் வரலாற்றின் எல்லா தரப்புகளும் முக்கியமானவை என்று புரிந்துகொள்ளலாம். இந்த நிலத்தில் நீரூற்றினல் இங்கே புதைந்துள்ள எல்லா விதைகளும் முளைக்கவேண்டும். ஆனால் சம்பிரதாயவரலாற்றின் நீரை ஊற்றினால் சிலவிதைகளே முளைக்கின்றன. அயோத்திதாசர் முன்வைக்கும் இந்த புராணிகவரலாற்றின் நீரே எல்லா விதைகளையும் முளைக்கச்செய்கிறது.

அவ்விதைகள் முளைத்து வரும்போது தெரிகிறது நம்முடைய பண்பாட்டுவெளி என்பது இங்குள்ள அடித்தளச்சாதியினரால் உருவாக்கப்பட்டது என்பது. இங்குள்ள வரலாற்றுக்கட்டுமானங்கள் அனைத்தும் அந்த அடித்தள வரலாற்றின் வேர்ப்பரப்பின் மீது எழுப்பப்பட்டவை என்பது.

நம்முடைய வரலாற்றெழுத்து கருவறைக்குள் கோயில்கொண்ட ஆதிகேசவனை துதிப்பதாக மட்டுமே உள்ளது. அந்த சகஸ்ரநாமத்தை மட்டுமே நாம் கேட்டுக்கொண்டிருக்கிறோம். கேசிகளை எழுப்பும் மந்திர உச்சாடனத்தையும் நாம் வரலாறாகக் கொள்ளவேண்டியிருக்கிறது. அதற்கான வழிகாட்டலாக அமைந்தது அயோத்திதாசர் அவர்களின் ஆரம்பகால நூலான இந்திரர் தேச சரித்திரம்.

## *[3]*

*அயோத்திதாசர் உருவாக்கிய வரலாற்றெழுத்தின் அடிப்படையான கூறுகள் என்னென்ன? அவற்றை என் அவதானிப்பில் நான் இவ்வாறு வகுத்துக்கொள்வேன்.*

*அயோத்திதாசர் அவர்களின் இந்திரர்தேசத்து சரித்திரத்தில் நாம் காணும் முதன்மையான அம்சம் அதன் மாற்று வரலாற்றுத் தரிசனம். அதை எழுதப்பட்ட வரலாற்றின் தலைகீழாக்கம் என்று ராஜ்கௌதமன் போன்றவர்கள் சொல்கிறார்கள். ஆனால் அந்த தலைகீழாக்கம் அயோத்திதாசர் அவர்களால் கண்டடையப்பட்ட ஒன்றல்ல. அது ஏற்கனவே இங்கே இருப்பதன் நவீன வடிவம்தான். தலைகீழாக்கம் எப்போதுமே நம் மரபில் இருந்துகொண்டிருக்கிறது.*

*ஒரு தொன்மக்கதை. இக்கதை நிகழும் காலகட்டத்தில் பறையர்களும் புலையர்களும் ஆதிக்கசாதிகளாக இருந்தனர். திருவனந்தபுரம்கோயிலிருக்கும் இடம் அனந்தன்காடு என அழைக்கப்பட்டது . அங்கிருந்த அனந்தன்சாமி அன்று புலையர்களின் குலதெய்வம். அதற்கு ஒரு நம்பூதிரி பிராமணன் பூசைசெய்துவந்தான். அவன் பரதேசிப்பிராமணன் என்கிறது கதை. அதாவது வெளியே இருந்து வந்தவன். அவன் கொண்டுவந்த தீ அணைந்துபோனதனால் அருகே உள்ள புலையர் குடிலுக்கு தீ கேட்கசென்றான் . அங்கிருந்த புலையர்பெண்ணைக்கண்டு காதலுற்றான்.*

*ஆனால் அன்று புலையர் உயர்சாதியாகையால் அவனுக்குப் பெண்கொடுக்க அவள்தந்தையான மூத்தபுலையர் மறுத்துவிட்டார். நம்பூதிரி பலவாறு வற்புறுத்தினான். விரதமிருந்தான். கடைசியில் புலையர்தலைவன் அவனை அனந்தன்காட்டுக்குள் கூட்டிசென்று ஒரு பாழுங்கிணற்றைச் சுட்டிக்காட்டி அதற்குள் தண்ணீர் இருக்கிறதா என்று பார்க்கும்படிச் சொன்னார். குனிந்து பார்த்த நம்பூதிரியின் கால்களை தூக்கி அவனை அபப்டியே கிணற்றில் தள்ளிவிட்டுவிட்டான். தலைகீழாக கிணற்றில் விழுந்த நம்பூதிரி இறந்தான்*

நெடுங்காலம் கழித்து அவ்வழி வணிகத்துக்காக வந்த செட்டிகள் அந்த கிணற்றருகே அமர்ந்து தங்கள் தயிர்சாதப்பொட்டலத்தை பிரித்தனர். அந்த தயிர்சாத மணம் கேட்டு நம்பூதிரி மேலே வந்தான். நடுவே சோற்றுமூட்டையை வைத்து சுற்றி அனைவரும் அமர்ந்து கொள்ள தலைவன் உருட்டி ஒவ்வொரு கையிலும் கவளங்களை வைத்தான். எட்டு கைகள் சோற்றுக்காக நீண்டபோது ஒன்பதாவது கையாக தானும் கைநீட்டினான். இருட்டாக இருந்தமையால் வணிகர்தலைவன் அதை கவனிக்கவில்லை.

அவர்கள் கிளம்பியபோது நம்பூதிரியின் ஆவியும் கூடவே வந்தது. அடுத்து அவர்கள் குமரிமாவட்டத்தில் உள்ள இரவிப்புதூர் என்ற இடத்தில் மூட்டையை பிரித்தபோது ஆவியும் கைநீட்டியது. இப்போது பகல். ஆகவே ஒரு கை கூடுவதை தலைவன் கவனித்துவிட்டன். சோற்றை அருகே இருந்த கிணற்றுக்குள் வீசினான். நம்பூதிரி தலைகீழாக உள்ளே பாய்ந்தான். மேலே மந்திரம்போட்டு நூலைக்கட்டி அவனை உள்ளே அடைத்துவிட்டான் தலைவன். அந்த நம்பூதிரியை அங்கேயே நிறுவி கோயில்கட்டி வருடத்துக்கு ஒருமுறை தயிர்சாதம் படைத்து வழிபட ஆரம்பித்தனர்

சுவாரசியமென்னவென்றால் இந்த சிறுதெய்வம் தலைகீழாகத்தான் நிறுவப்பட்டுள்ளது. தலைகீழ் தெய்வத்துக்குத்தான் படையலும் வழிபாடும் நடக்கிறது. ஆமாம், தலைகீழாக்கம் இங்குள்ள அடித்தளச்சாதியினரின் வரலாற்றில் எப்போதும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது

இந்திரர்தேசத்துச் சரித்திரத்தில் இதற்கிணையான பல நிகழ்வுகளை அயோத்திதாசர் கூறுதுகிறார். உண்மையில் பிராமணர்களை வெறுத்து ஒதுக்கி சாணியடித்து துரத்துபவர்கள் பறையர்களே என்கிறார். ராஜ்கௌதமன் அவரது நூலில் அது அயோத்திதாசர் செய்யும் ஒரு தலைகீழாக்கம் என்கிறார். ஆனால் நான் என் சிறுவயதுமுதல் அத்தகைய நூற்றுக்கணக்கான கதைகளை கேட்டு வளர்ந்திருக்கிறேன். குறைந்தது முந்நூறு ஆண்டு பழைமைகொண்ட தொன்மங்கள் பலவற்றில் அதற்கிணையான சித்தரிப்புகள் உள்ளன

அதாவது அயோத்திதாசர் எதையும் புதிதாக புனையவில்லை. புதிய தலைகீழாக்கங்களை நிகழ்த்தவுமில்லை. ஏற்கனவே இந்திய வரலாற்று மரபின் ஒரு பகுதியில் இருந்துகொண்டிருந்த ஒரு சரடை நவீன மொழிபுக்குள் கொண்டு வருகிறார் , அவ்வளவுதான்.

அன்றைய வரலாற்றெழுத்து அதை ஒருபொருட்டாக நினைக்கவில்லை. ஏனென்றால் அன்று நாட்டாரியல் சார்ந்த எவற்றையும் வரலாற்று ஆதாரங்களாகக் கொள்ளக்கூடாதென்ற எண்ணம் இருந்தது. சுசீந்திரம் பேராலயம் பற்றி ஒரு மகத்தான நூலை உருவாக்கிய கே.கே.பிள்ளை சுசீந்திரம் பற்றிய எந்த நாட்டார்கதையையும் ஒரு பொருட்டாக எடுத்துக்கொள்ளவில்லை. அவை மனம்போனபடிச் சொல்லப்படும் வாய்மொழிக்கூற்றுக்கள் என்றே நினைத்தார். தொல்லியல் ஆதாரங்களும் இலக்கிய ஆதாரங்களுமே வரலாற்றை உருவாக்குகின்றன என அவர் நினைத்தார்.

அடுத்தபடியாக அயோத்திதாசர் அந்த மாற்று வரலாற்றுத் தரிசனங்களின் அடிப்படையில் தொன்மங்களை மறு கட்டமைக்கிறார். மாவலி பற்றிய தொன்மத்தை அவர் கையாளும் முறை ஓர் உதாரணம். இதுவும் அவரது விசேஷ கண்டுபிடிப்பு அல்ல. இந்தவகையான மாற்று விளக்கங்கள் எப்போதுமே நம்முடைய மரபில் இருந்துள்ளன. கொடுங்கல்லூர் கோயில் இன்று ஒரு துர்க்கை ஆலயம். அதற்கு முன் அது சேரன் செங்குட்டுவன் நிறுவிய கண்ணகி ஆலயம்.

ஆனால் நல்லம்மை தோற்றம் என்ற புலையர்களின் வாய்மொழிப்பாடல் இன்றும் அக்கோயிலில் முதல்நாள் திருவிழாவில் பாடப்படுகிறது. முதல்நாள் திருவிழா புலையர்கள் மற்றும் குறும்பர்களுக்கு உரிமைப்பட்டதாக இருந்திருக்கிறது. இன்று அது எல்லாசாதியினருக்குமானதாக ஆகிவிட்டது. அன்று கோயிலின் பிராமணப்பூசாரிகள் கோயிலை திறந்துவிட்டு தேவியை கொண்டுவந்து முகமண்டபத்தில் வைத்து விட்டு வெளியேறிவிடுவார்கள். பின்னர் அவர்கள் திரும்பிவந்து கோயிலை தீட்டுக்கழித்து திரும்ப எடுத்துக்கொள்கிறார்கள்

அந்த நல்லம்மைத்தோற்றம் பாட்டில் கண்ணகி ஒரு நாட்டார்தெய்வமாக இருக்கிறாள். செங்குட்டுவன் நிறுவுவதற்கும் முற்பட்ட வடிவம். அவளுக்கு பௌத்ததாராதேவியின் சாயல்கள் இருக்கின்றன. மாமங்கலை என்று சொல்லப்படுகிறாள். அதாவது நாம் தொன்மங்கள் உறுதியான கட்டமைப்புகளாக இல்லை. ஏற்கனவே அவை பல்வேறு மாற்றுவடிவங்களுடன்தான் இருக்கின்றன. இந்திரர்தேசத்துச் சரித்திரத்தில் அயோத்திதாசர் எழுதியதுபோலவே இருக்கிறது நல்லம்மைத்தோற்றம்

இன்னொருசுவாரசியம், கொடுங்கல்லூர் தேவி கோயிலின் பூசாரிகள் அடிகள் எனப்படுகிறார்கள். அவர்களுக்கு கேரள நம்பூதிரி மரபில் இடமில்லை.[ இதுசபரிமலை பூசாரிகளுக்கான தந்திரிகளுக்கும் பொருந்தும். அவர்கள் கேரளப் பிராமணர்கள் அல்ல,

பிராமணத்துவம் உடைய ஒரு தனிக்குடும்பம். இந்த அம்சம் இவ்விரு ஆலயங்களும் பௌத்த பூர்வீகம் கொண்டவை என்பதற்கான சான்றாகக் கருதப்படுகிறது] அடிகள் என்பது பௌத்த -ச்மண துறவிகளுக்கான அடைமொழி. அவர்களின் இடத்தை இவர்கள் எடுத்துக்கொண்டார்கள் என்று சொல்லலாம். ஆம், இந்திரர்தேசத்துச் சரித்திரத்தை இங்கே அப்படியே திருப்பி எழுதிவிடலாம்

மூன்றாவதாக அயோத்திதாசர் சொற்களை புதியதாக விளக்குவதை சுட்டிக்காட்டலாம். அசுரர் என்ற சொல்லை அவர் விளக்குவதை உதாரணமாகச் சொல்வேன். அதற்கும் நம் மரபில் நீண்ட வேர் உள்ளது. ஆதிகேசவன் பற்றிய தொன்மத்தைச் சொன்னேன். குமரிமாவட்ட அடித்தள மக்களின் வில்லுப்பாட்டில் கேசவன் என்ற சொல்லுக்கு ஒரு விளக்கம் உள்ளது. கேசியின்மகன் என்றுதான அச்சொல் பொருள் தருகிறது. ஆதிகேசவன் கேசியை வெல்லவில்லை, மகனாகிய அவனை அவள் தன் மடியில் வைத்திருக்கிறாள் என்பாகள்.

இப்படித்தொகுக்கிறேன்.

1. அயோத்திதாசர் எழுதப்பட்ட வரலாற்றுக்கான மாற்றுவடிவை மக்களின் நம்பிக்கைகள் மற்றும் தொன்மங்களில் இருந்து எடுக்கிறார்

2. எழுதப்பட்ட வரலாற்றின் முறைமையை முழுமையாக நிராகரித்து மக்களிடையே ஏற்கனவே இருந்துகொண்டிருக்கு ஒரு புராணிக வரலாற்று முறைமையை கையாள்கிறார்

3. அந்த மாற்றுவரலாற்றின் சாராம்சம் இன்றைய விடுதலைக்காகவும் நாளைய சமத்துவசமூகத்துக்காவும் அமையவேண்டுமென நினைக்கிறார். அதனடிப்படையில் அந்த மாற்றுவரலாற்றை அவர் நவீனப்படுத்துகிறார்

அதற்காக அயோத்திதாசர் கீழ்க்கண்ட வழிகளை கையாள்கிறார்

1, மாற்று வரலாற்றுத்தரிசனம்

2. மாற்றுத் தொன்மவிளக்கம்

3. மாற்று சொல்விளக்கம்

அயோத்திதாசர் முன்வைப்பது ஒரு எளிய முன்வரைவை மட்டுமே. நம்மை நாம் இப்படியும் பார்க்கலாமே என்கிறார். அன்றைய கேம்பிரிட்ஜ் ஆய்வுநோக்கும், தேசிய ஆய்வுநோக்கும் அதை ஒரு முறைமை இல்லாத பாமரத்தனமான முயற்சி என நிராகரித்துவிட்டன. பின்னர்வந்த மார்க்ஸிய வரலாற்றாய்வுநோக்கும் அதை தரவுகளின் அடிப்படையற்ற ஆய்வுமுறை என நிராகரித்தது. அது ஏறத்தாழ நூறாண்டுகளுக்கு எவர் கண்ணுக்கும்படவில்லை

மேலே சொன்ன மூன்று ஆய்வுமுறைகளும் வரலாற்றுரீதியாக நம் ஆன்மீகத்தைப் புரிந்துகொள்வதற்கு எவ்வகையிலும் பயனற்றவை. ஆகவே நாம் நம்முடைய சொந்த ஆன்மீகத்தை, நமக்குள் உறையும் ஆழ்படிமங்களையும் தொன்மங்களையும் படிமங்களையும் , புரிந்துகொள்ள நமக்குரிய வரலாற்றாய்வுமுறை ஒன்று தேவை. அந்த தளத்தில் அயோத்திதாசர் அவர்களின் வழிகாட்டல் முக்கியமானது

அந்தக்கோணத்தில் நாம் நம்முடைய வரலாற்றை மீட்டு எழுதவேண்டிய ஒரு பெரும்பணி நம் முன் இருக்கிறது.

*

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்காலம் முதல் நம்முடைய வரலாறு நவீன நோக்கில் எழுதப்படும் பணி தொடங்கியது. அவ்வாறு வரலாறு தொகுது நவீனப்படுத்தி எழுதப்பட்டபோது அதன் விளைவாக நம்முடைய ஆன்மீகமும் மறுஆக்கம் செய்யப்பட்டது.சைவம் வைணவம் போன்றவற்றில் நிகழ்ந்த மறுமலர்ச்சி என்பது இதுதான். அதாவது அவற்றின் ஆன்மீகமானது மறுவரலாற்றுவிளக்கம் பெற்றது.

ஏறத்தாழ இதேகாலகட்டத்தில்தான் பௌத்தமும் மறுவிளக்கம் பெற்றது. ஆல்காட், ரைஸ் விலியம்ஸ், பால் காரஸ் போண்ற மேலைநாட்டறிஞர்களாலும் அநகாரிக தம்மபால போன்ற கீழை அறிஞர்களாலும். சைவமும் வைணவமும் எப்படி நவீனகாலகட்ட்டதுக்காக மறு ஆக்கம் செய்யபப்ட்டனவோ அதேபோலவே பௌத்தமும் மறு ஆக்கம்செய்யப்பட்டது.

இந்த மறுஆக்கத்தை இப்படி விளக்கலாம். இவை ஒருவகை சுத்தப்படுத்தல்கள். பல்வேறுசல்லடைகள் வழியாக மதமும் பண்பாடும் அரிக்கப்படுகின்றன. முதலில் புறவயத்தன்மை என்ற சல்லடை. அதன்பின் தத்துவத்தர்க்கம் என்ற சல்லடை. அதன்பின்

நவீன அறிவியலால் உருவாக்கப்பட்ட பகுத்தறிவு என்ற சல்லடை. பொதுநாகரீகம் என்ற சல்லடை.

இப்படி அரித்து எடுக்கப்பட்ட தூய அம்சங்களைக்கொண்டு ஒரு மையம் கட்டப்படுகிறது. அதன்பின் அந்த மையம் எப்படி வரலாற்றில் உருவாகி வளர்ந்துவந்தது என்று விளக்கப்படுகிறது. இங்கே சைவம் வைணவம் எல்லாம் அப்படித்தான் விளக்கப்பட்டன. அதற்காகவே நூல்கள் எழுதிக்குவிக்கப்பட்டன.

அயோத்திதாசர் அவர்களின் அணுகுமுறை இதற்கு நேர் எதிரானது. அவரிடம் நவீனகாலகட்டம் உருவாக்கிய எந்தச்சல்லடையும் இல்லை. அவருக்கும் அவரதுசமகாலத்தவரும் தோழருமான பேரா லட்சுமிநரசுவுக்கும் இடையேயான வேறுபாடே இதுதான். லட்சுமிநரசு முன்வைப்பது சல்லடைகளால் சலிக்கப்பட்ட பௌத்தத்தை. அயோத்திதாசர் முன்வைப்பது அபப்டியே மண்ணில் இருந்து அள்ளப்பட்ட ஒஉ பௌத்தவரலாற்றை, லட்சுமிநரசுவின் பௌத்ததில் மக்களின் நம்பிக்கைகளுக்கும் தொன்மங்களுக்கும் இடமில்லை. தமிழின் நீண்ட பாரம்பரியமே அதில் இல்லை. அவர் சொல்வது தத்துவார்த்தப்படுத்தப்பட்ட புறவயமாக ஆக்கப்பட்ட பகுத்தறிவுக்கு உகந்த ஒரு பௌத்தத்தை. அதுவல்ல அயோத்திதாசர் முன்வைப்பது.

அயோத்திதாசர் ரும் பௌத்தத்தையே பேசுகிறார், ஆனால் அவர் அடியிலிருந்து பேசுகிறார். லட்சுமிநரசு மேலிருந்து பேசுகிறார். அவரது சமகாலத்துச் சிந்தனையாளர்கள் அனைவரும் மேலிருந்து பேசியவர்களே.பிற அனைவரும் ஆன்மீகத்தின் வரலாற்றை உச்சங்களைக்கொண்டு புனைகிறார்கள். சிறந்தபுள்ளிகளைக்கொண்டு கட்டுகிறார்கள். அயோத்திதாசர் எல்லாவற்றையும் அப்படியே அள்ளி வைக்கிறார். அதில் ஒரு 'பண்படாத தன்மை' இருக்கிறது. ஆனால் அதுவே அவரது பலம், சிறப்பம்சம். அதையே நான் அவரை முன்னோடி என்று சுட்டுவதற்கான காரணமாக கருதுகிறேன்.

அந்த 'பண்படாததன்மை' காரணமாக பிறவழிமுறைகளில் தடுக்கப்பட்டு வெளியே நிறுத்தப்பட்ட பல்வேறு வரலாற்றுக்கூற்றுகள் உள்ளே வந்துவிடுகின்றன. அடித்தள மக்களின் குரல்கள் வரலாற்றுக்குள் ஒலிக்கமுடிகிறது. வேறுவகையான வரலாற்று மொழிபுகளுக்கான வாய்ப்புகள் கிடைக்கின்றன. அணைகட்டி நிறுத்தப்பட்ட நம்முடைய வரலாற்றுக்களத்தில் குப்பையும்கூளமும் மலர்களும் மண்மணமுமாக புதுவெள்ளம் ஒன்று நுழைய முடிகிறது.

*

என் முதிரா இளமையில் வரலாற்று ரீதியான ஆன்மீகம் என்று பி.கெ.பாலகிருஷ்ணன் சொன்ன சொல் என்னுடைய ஆழத்தில் கிடந்திருக்கவேண்டும். பின்னர் விஷ்ணுபுரம் எழுதியபோது நான் முயன்றது அதற்காகவே. அந்நாவல் நம்முடைய ஆன்மீகத்தேடலை பிரம்மாண்டமான வரலாற்றுப்பின்னணியில் நிறுத்தி ஆராய்வதற்கான ஒரு முயற்சி. அந்நாவலைப்பற்றி நான் இங்கே விரிவாகச் சொல்லவேண்டியதில்லை. வெளிவந்தபோது மிகப்பெரும்பாலான ஆய்வாளர்களால் மேலோட்டமான அபிப்பிராயத்துடன் கடந்துசெல்லப்பட்ட நாவல் அது. இன்றுதான் அதற்கான மிகச்சிறந்த வாசிப்புகள் வந்துகொண்டிருக்கின்றன

அந்நாவலில் முதன்மையாக நான் உருவாக்கியது ஒரு பின்னலைத்தான். அந்நாவலில் வரும் விஷ்ணு முதல் ஆறுகள் மலைகள் சிறுதெய்வங்கள் வரை அனைத்துக்கும் மூன்று முகங்கள் உண்டு. ஒரு வைதிகமுகம். ஒரு ஆதிக்கத்தமிழ் முகம். ஒரு ஆதிச்சமூகத்தின் முகம். ஒவ்வொரு நிகழ்வுக்கும் மூன்று விளக்கங்கள் உண்டு. ஏன் ஒவ்வொரு சொல்லுக்கும் மூன்று முகம் உண்டு. அந்த மூன்று அடுக்குகள் நடுவே நிகழும் ஒரு நுட்பமான ஊடுபாவுதான் அந்நாவல்.

மொத்த விஷ்ணுபுரத்தையே பாண்டியனும் மகாவைதிகனும் சேர்ந்து தொல்தெய்வமான நீலியின் முன் காலடியில் கொண்டுவைக்கும் ஒரு பெரும் காட்சி சித்தரிப்பு அந்நாவலில் உண்டு. அந்த அத்தியாயத்தை எழுதியபோது நான் உண்மையிலேயே ஒரு புதிய வாசலைத் திறந்ததாக உணர்ந்தேன். மூர்க்கமாக தட்டித்தட்டி ஒரு சிறு இடுக்கைக் கண்டுகொண்டிருக்கிறேன். ஆம், விஷ்ணுபுரம் ஒரு மாற்று வரலாறு.

அப்போது நான் அயோத்திதாசரைப்பற்றி கேள்விப்பட்டதில்லை. ஆச்சரியமென்னவென்றால் விஷ்ணுபுரம் சம்பந்தமான ஒரு விவாத அரங்கில்தான் முதல்முறையாக ஒருவர் அயோத்திதாசர் பற்றி என்னிடம் சொன்னார். இன்று அவர் சொன்னது எனக்கு ஆச்சரியமளிக்கிறது. ‘தெரிந்தோ தெரியாமலோ நீங்கள் விஷ்ணுபுரம் நாவலில் எழுதிய விஷயங்களை நீங்களே புரிந்துகொள்ளவேண்டுமென்றால் அயோத்திதாசர் நூல்களை வாசிக்கவேண்டும்’ என்றார் அவர். அவருடன் சென்று நான் அன்பு பொன்னோவியம் அவர்களைச் சந்தித்தேன்

*கொற்றவையை எழுதும்போது நான் அயோத்திதாசர் நூல்களை வாசித்துவிட்டிருந்தேன். அவரது மாற்றுப் 'புராணவரலாற்றெழுத்து' முறையால் உற்சாகமும் அடைந்திருந்தேன். கொற்றவையில் ஒரு வாச்கான் அயோத்திதாசர் தன் நூல்கள் வழியாக காட்டிய மூன்று வழிகளும் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். விஷ்ணுபுரத்தில் அறியாமல் அவற்றைக் கையாண்டவன் அதைப்பற்றிய தெளிவுடன் கொற்றவையில் அந்த வழிமுறைகளை பயன்படுத்தினேன்*

*கொற்றவை ஒரு மாற்றுத்தமிழ்வரலாறு. மேலிருந்தும் கீழிருந்தும் அதில் வரலாறு எழுதப்பட்டுள்ளது அதிலும் நீலி வருகிறாள். வரலாறு அவளுக்கு வெளியே ஒன்றாகவும் அவள்வழியாக இன்னொன்றாகவும் அந்நாவலில் ஓடிச்செல்கிறது. அதில் ஒட்டுமொத்த தமிழ்த் தொன்ம உலகும் மறுவிளக்கம் அளிக்கப்பட்டுள்ளது. சொற்கள் மறுஆக்கம்செய்யப்பட்டு அதன் வழியாக இன்னொரு வரலாறு உருவாக்கப்பட்டுள்ளது. கொற்றவையில் சாம்பவர் பற்றிய தொன்மக்கட்டுமானம் போன்றவற்றை அயோத்திதாசர் அவர்களின் முன்னுதாரணம் இல்லையேல் எழுதியிருக்கமுடியாது. அயோத்திதாசர் அவர்கள் கையாண்ட பல சொற்கள் பல தொன்மங்கள் அந்நாவலில் கையாளப்பட்டுள்ளன.*

*

*ஊழ்கத்தில் நாம் கண்மூடி அமர்கையில் என்ன நிகழ்கிறது? முதலில் நாம் சொற்களை நம் அடியிலா ஆழம் நோக்கி ஏவுகிறோம். நமக்குள் ஒரு ராணித்தேனீ இருந்து சொற்களை முட்டையிட்டு குஞ்சுபொரித்து அனுப்பிக்கொண்டே இருப்பதை அறிகிறோம். இது முடியவே முடியாதா என சலிக்கிறோம். சொற்கள் வழியாக ஒரு படிக்கட்டை அமைத்து அதில் கால்பதித்து அந்த இருளுக்குள் இறங்கிச் செல்கிறோம்*

*அச்சொற்களெல்லாம் தீர்ந்தபின் நாம் படிமங்களை ஏவ ஆரம்பிக்கிறோம். நமக்குள் இருக்கும் ஒரு சில அச்சுகளுக்குள் நம் கற்பனை சென்றமைந்து படிமங்களை உருவாக்கிக்கொண்டே இருப்பதை உணர்கிறோம். அலைகளை அனுப்பிக்கொண்டே இருக்கும் முடிவில்லா பெருங்கடலென அதை அறிகிறோம். ஏதோ ஒருபுள்ளியில் நாம் கடலை கண்டுவிட்டால் அலைகள் இல்லாமலாகிவிடுகின்றன.*

அதன்பின் நாம் நமக்கான ஒரு படிமத்தைக் கண்டுகொள்கிறோம். அந்தப்படிமத்தின் கடைசிப்படியில் நின்று நாம் நம் ஆழத்து இருளுக்கு அப்பால் திறக்கும் ஒரு வாசலை சென்றடைகிறோம்.

இந்தப்பயணத்தில் நாம் கையாளும் சொற்களும் படிமங்களுமெல்லாம் இந்த பண்பாட்டுவெளியிலிருந்து நமக்களிக்கப்பட்ட்டவை என்னும்போது அவற்றை அறியாமல் நாம் ஒருபோதும் நம் ஆன்மீகத்தை உணர்ந்துவிடமுடியாது. ஒலியோ சொல்லோ பொருளோ சித்திரமோ நாம் அதை ஆழ்ந்தறியாமல் அதை சரியாகப் பயன்படுத்துவது முடியாது. ஆகவேதான் வரலாற்றுரீதியான ஆன்மீகம் என்று பி.கே.பாலகிருஷ்ணன் சொன்னார்

நாம் கையில்வைத்திருக்கும் சொற்களும் படிமங்களுமெல்லாம் பதினெட்டாம் நூற்றாண்டுவரை வரலாற்றின் பல ஓடைகள் வழியாக பல வழிகளில் பலவற்றைக் கரைத்துக்கொண்டு ஓடிவந்து சேர்ந்தவை. பதினெட்டாம்நூற்றாண்டுக்குப்பின் அவை பல்வேறு மதங்களாக அணைகட்டி கால்வாய்கள் வழியாக ஒழுங்குபடுத்தப்பட்டு அனுப்பப்பட்டு நம்மிடம் வந்துள்ளன. அவற்றை மேலும் மேலும் பின்னகர்ந்து சென்று அறியாமல் அவற்றுக்குள் நாம் நுழைய முடியாது.

நம்மிடமிருப்பவை எல்லாமே மேலிருந்து பார்க்கப்பட்டவை. மேற்பரப்பிலிருந்து எடுத்துத் தொகுக்கப்பட்டவை. கிளையிலிருந்தும் இலையிலிருந்தும் மலரில் இருந்தும் எடுக்கப்பட்டவை. அவை அளிக்கும் அர்த்தத்துக்கு மிகப்பெரிய எல்லை உண்டு. இவையனைத்தையும் அடியிலிருந்து பார்க்கமுடியும். வேரிலிருந்து அணுகமுடியும். அதற்கான ஒரு வழியை அயோத்திதாசர் அவர்களின் அணுகுமுறை திறந்துவைக்கிறது.

நான் நாட்டுப்புறப்பாடல்களை சேர்த்துவைப்பதில் ஆர்வமுடையவன். கடையில் ஒரு நாட்டுப்புறப்பாடலை வாங்கினேன். புலைச்சியம்மன் தோற்றம் பாட்டு. நாட்டுப்புறப்பாட்டு என்று சொல்லமுடியாது, எண்சீர்கழிநெடிலடி ஆசிரியமும் நடுவே பயின்று வருகிறது. அந்நூலை பிரசுரித்தவரின் தொலைபேசி எண் இருந்தது. அவரிடம் பேசினேன். அம்மன் அருள்வாக்கு சொன்னதனால் அந்தப் பாடலை பாடியதாகச் சொன்னார். புலைச்சியம்மன் ஒரு கிழவியில் சன்னதமாகி வந்து ‘என் சரித்திரத்தைப் பாடுடா’ என்று ஆவேசமாக ஆணையிட்டாளாம்.

*என் சரித்திரத்தப்பாடு என ஆணையிடும் நூற்றுக்கணக்கான தெய்வங்கள் உறங்கும் மண் இது. அவர்களுக்கெல்லாம் இடமுள்ள ஒரு வரலாற்றை நாம் உருவாக்கியாகவேண்டியிருக்கிறது.*

******